*Navacakti*

*Cilampu 1, paral 34*

*June 17, 1921*

Record no. 2305

REGISTERED No. M. 1500.

# நவசக்தி

**NAVASAKTI**

(தமிழ் வாரப் பதிப்பு)

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.

| சந்தா விவரம். | | |
|---|---|---|
| வருட சந்தா | ரூ. | 5 0 |
| ஆறுமாத சந்தா | ,, | 3 0 |
| மூன்றுமாத சந்தா | ,, | 1 8 |
| வெளி நாடு-வருட சந்தா | ,, | 6 0 |

"வீடு பெறநில்"

"மாற்ருனுக் கிடங்கொடேல்"

| விளம்பர விகிதம். | |
|---|---|
| கலம் 1-க்கு வாரம் 1-க்கு ரூ. | 7 0 |
| சில்லரை விளம்பரம்-1 அங். | 0 8 |

நீண்டகாலம் விளம்பரஞ் செய்வோர் நேரே எங்கட்கு எழுதவும்.

"ஏற்பதிகழ்ச்சி"

சிலம்பு 1. துன்மதிஞு ஆனிமீ சஉ (17—6—21) பரல் 34

## எந்த ஆட்சி முறை சிறந்தது?

### ஆப்பிரிக்காவில் சுதேசிகளின் நிலைமை.

ஆப்ரிக்காவின் ஒரு பாகம் ஜர்மானியர் வசம் இருக்கும்போது அவர்கள் அங்குள்ள சுதேசிகளை மிகக் கொடுமையாக நடத்தி வந்தார்கள் என்று நமக்குச் சொல்லப்பட்டு வந்தது. ஜர்மானியர்கள் கறுத்த மனிதர்களுக்குப் பலவிதமான தீங்குகள் இழைக்கிருர்கள் என்பதற்கு அநேக ஆதாரங்கள் எடுத்துக் காட்டப்பட்டன. ஜர்மானியர்களுடைய துன்பத்தினின்றும் சுதேசிகள் விடுதலை யடைவதற்குத் தக்கவழி ஜர்மானிய ஆட்சி ஒழிவதே என்றும் சொல்லப்பட்டது. கடைசியில் நேசக்கட்சியார் யுத்தத்தில் வெற்றி பெற்றனர். ஜர்மானிய ஆப்பிரிக்கா நேசக்கட்சியார் வசம் வந்தது. அப்பொழுது தான் ஆப்பிரிக்கர்களும் அவர்களிடத்தில் அநுதாபம் கொண்டவர்களும், இதுகாறும் சுதேசிகள் நெருப்புக்கு அருகாமையில் இருந்தார்கள் என்றும் இனி நெருப்பிலேயே தள்ளப்பட்டார்கள் என்றும் கண்டு கொண்டார்கள். ஆள்வோர்கள் மாறினர்களேயன்றி வேறெவ்வித மாற்றமும் உண்டாகவில்லை. முன்னர் ஜர்மானியருடைய எந்தக் கொடுமை முறைகளை பிரிட்டிஷார் கண்டித்து வந்தார்களோ அதே முறைகளை அநுசரிப்பின் அதனை நாம் என்னென்று கூறுவது? கிழக்கு ஆப்பிரிக்காவில் தொழிலாளர் சம்பந்தமாகப் பிரிட்டிஷார் அநுசரித்து வரும் முறை தான், நம்மை இக்கேள்வியைக் கேட்கச் செய்கிறது. யுத்த காலத்தில் ஜர்மானியர்களுடைய கொடுமைகளைவிளக்கக்கணக்கிலடங்காப்புத்தகங்கள் செலவாயின. கறுப்பு மனிதர்கள் ஜர்மன் ஆட்சியைக் கண்டு நடுங்குகிருர்களென்றும் பிரிட்டிஷ் ஆட்சியில் சந்தோஷமாக இருக்க விரும்புகிருர்களென்றும் உலகத்தார் எண்ணும்படி செய்யப்பட்டது. இப்பொழுதோ ஜர்மானிய ஆட்சி ஒழிந்தும், பிரிட்டிஷார் சுதேசிகளைக் கட்டாய ஊழியம் செய்ய வற்புறுத்துகின்றனர். யுத்த காலத்தில் இராணுவ ஊழியம் செய்த பலர் (வெள்ளையர்) கிழக்காப்பிரிக்காவுக்குக் குடியேற்றப் பட்டு அங்கே கரம்பாகக் கிடக்கும் நிலங்களுக்குச் சொந்தக்காரர்களாக்கப்படுகிருர்கள். சுதேசிகளின்உதவியின்றி இந்தநிலங்களைச்சாகுப்படி செய்ய முடியாது. குறைவான கூலியில் சுதேசித் தொழிலாளர் சரியாகக் கிடைக்கவில்லை. எனவே இந்த வெள்ளையர்கள் கட்டாய ஊழிய முறையைச் சுதேசிகள் விஷயத்தில் அநுசரிக்கும்படி அரசாங்கத்தை வற்புறுத்துகிருர்கள்.

அரசாங்கத்தாரும் இப்பொழுது இதற்கு இணங்கிவிட்டதாகத் தெரிகிறது. வெள்ளையர்கள் கொழுமை பெறுவதற்காக நீக்ரோவர்கள் வசிக்கிருர்களோ? மிகத் தொலைதூரத்திலுள்ள இந்த ஏழைகளின் கூக்குரல் இங்கிலாந்திலுள்ள எந்தக் கட்சியார்காதிலும் விழுவதில்லை! கறுப்புமனிதர்களுக்குத் தங்களைப்போலவே இரத்தமும் சதையும் இருக்கிறதோ என்று நினைக்கும் பெரியமனிதர்களும் இங்கிலாந்தில் இருக்கிருர்கள். "சோம்பேறித்தனமுள்ள இந்த இழிஞர்கள் (கறுப்புமனிதர்கள்) வேலைசெய்யும்படி கட்டாயப்படுத்தப்பட வேண்டும்" என்பதே வெள்ளையர் பலருடைய கொள்கையாக இருக்கிறது.

## இந்தியாவின் உதவி இன்றேல்—?

### இங்கிலாந்தின் நிலை என்ன?

(ஸ்ரீமான் சுரேந்திரநாத் எம். ஏ. எழுதுவது.)

(ஆசியன் ரேவ்யு)

ஐரோப்பிய சமூகங்கள் இடைக்காலத்தில் ஒரு பெரிய இருட்டினின்றும் வெளியேறினவுடன் புதிய உணர்ச்சி பெற்றன. அப்புதிய வுணர்ச்சிக்குக் காரணமாயிருந்த சக்திகளுள் இந்தியாவும் ஒன்ருகும்.

இப்புத்துணர்ச்சி பெற்றதற்குக் காரணங்கள் பலவாறு கூறுப. ஜனத்தொகை அதிகமாக, அதற்குத் தகுந்த உணவு தேடவேண்டுமென்ற அவா ஏற்படுகிறது. எனவே, சமூகத்தின் பொருள் விருத்தியை அதிகமாக்க முயற்சி செய்யப் படுகிறது. விவசாயத்தை அதிகமாக அநுஷ்டிப்பதனுலும் நாட்டிற்கு நாடு விரிந்து கொண்டு செல்வதனுலுமே இந்தப் பொருள் விருத்தி ஏற்படும். மற்றும் அதிகமாக வியாபாரம் செய்து அதன் மூலமாகத் தன் செல்வத்தை அபிவிருத்தி செய்து கொள்ள வேண்டுமென்று ஒரு சமூகம் பிரயத்தனப்படுகின்றது. எனவே வியாபார வழிகளைத் தன் வசமே ஆக்கிக் கொள்ள அது முயற்சி செய்கிறது.

பதினைந்து பதினைந்தாம் நூற்ருண்டுகளில் இந்தியாவிற்கு இருந்த தரைவழியை முஸல்மான்கள் தங்கள் வசப்படுத்திக்கொண்டு விட்டார்கள். இதனுல் கொலம்பஸ் இந்தியாவுக்கு புதிய ஒரு வழியைக் கண்டுபிடிக்கமுயன்ருன். உலகத்திலுள்ள எல்லாக் கைத்தொழில்களையும் தங்கள் வசப்படுத்திக் கொள்ள வேண்டுமென்றமுதலாளிகளின் எண்ணத்திருலேயே உலகத்தில் அடிக்கடி சச்சரவுகள் உண்டாகின்றன.

முதலில் இங்கிலீஷ்காரர் இந்தியாவுக்கு வியாபாரம் செய்யவே வந்தார்கள். வியாபாரத்திலிருந்து மெதுவாக ஆட்சிமுறையையும் வசப்படுத்திக் கொண்டார்கள். ஆட்சிமுறையைக் கைப்பற்றிக் கொண்டு அதன் மூலமாகத் தங்கள் வியாபாரத்தையும் கைத்தொழிலையும் ஸ்தாபிதப்படுத்திக் கொண்டார்கள். தங்கள் வியாபாரத்தைக் கொழுமை பெறச் செய்ய வேண்டுமென்பதே பிரிட்டிஷாரின் முக்கிய நோக்கமாகும்.

உலகத்திலுள்ள எல்லா வியாபார ஸ்தாபனங்களும் ஏறக்குறைய பிரிட்டிஷ் வியாபாரிகளின் வசமே இருக்கிறபடியால் இங்கிலாந்துக்குப் பயமில்லை என்று அறிஞர்வெய்னிஸ்ச் என்பவர் கூறுகிருர்.

இங்கிலாந்தின் தினசரிவாழ்க்கை இந்தியாவை எங்ஙனம் பொறுத்திருக்கிறது என்பது, லார்ட் கர்ஸனின் பின்வரும் உரைகளினுல் நன்கு விளங்கும்:—

"பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வியாபாரத்தின், பத்தில் ஒருபங்கு இந்தியத் துறை முகங்களின் மூலமாகவே நடை பெறுகிறது. ஆஸ்திரேலியாவும் கானடாவும் சேர்ந்து செய்யும் வியாபாரத்தைவிட இந்தியாவின் வியாபாரம் அதிகமாகவே இருக்கிறது. இங்கிலாந்து, தன் உணவுப்பொருள்களுக்கும் மற்றமூலப்பொருள்களுக்கும் இந்தியாவையே எதிர்பார்க்கவேண்டியிருக்கிறது."

இதனுல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் என்னும் கட்டிடம் இந்தியா என்னும் ஸ்தம்பத்தின் மீதுதான் நிற்கிறது என்றுகூறவேண்டும். ஒரு ஜர்மன் அறிஞர் இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் உள்ள சம்பந்தத்தைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிருர்:—

"பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை உண்டாக்கியது இந்தியாவே. இந்தியா இல்லாமற் போனுல், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் என்பது கிரேட் பிரிட்டனுடனும் அதனைச்சேர்ந்த சில சிறுதீவுகளுடனும் நின்று போயிருக்கும். இந்தியாவுக்காகவே மால்டா, ஸைப்ரஸ், எகிப்து முதலிய நாடுகளைக் கைப்பற்றிக்கொள்ள வேண்டியதாயிற்று; மத்தியதரைக் கடலின் ஓரமாயுள்ள துறைமுகங்களையும் சூயஸ் வாய்க்காலையும் செகப்புக் கடலையும் வசப்படுத்திக்கொள்ள நேர்ந்தது; நன்னம்பிக்கை முனையையும், ஆப்பிரிக்காவின் கரையோரமாயுள்ள பிரதேசங்களையும், இந்தியன் ஆர்சிபெலோகோ, பர்மா, ஹாங்காங், சிங்கப்பூர் முதலிய இடங்களையும் தன்கைக்குள் வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. ஆஸ்திரேலியா, நியூஜீலந்து முதலிய தேசங்களில் தன் இராஜ்யத்தை வளர்த்திக் கொண்டு செல்லவேண்டியதாயிற்று. இந்தியா இல்லாவிட்டால் இங்கிலாந்து தென்பசிபிக் மஹா சமுத்திரத்தில் சென்றிருக்குமோ?"

ஆசியாவிலும் ஆசியாவுக்குச் சமீபத்திலும் கீழ்க்கண்ட நாடுகளைப் பிரிட்டன் வசப்படுத்திக்கொண்டது இந்தியாவினுலேயே யாகும்:—

(1) தென்னுப்பிரிக்கா, ஜர்மன் கிழக்கு ஆப்பிரிக்கா, எகிப்து, (2) ஹிஜாஸ், (3) மெசொபொத்தாமியா, (4) பர்ஷியா, (5) பலுசிஸ்தானம், (6) இந்தியா, (7) திபெத்து, (8) பர்மா, (9) மலேயாதீபகற்பம், (10) சைனுவிலுள்ள காண்டன்மாகாணம், (11) ஹாங்காங், (12) வெய்-ஹை-வெய்.

இந்த இடங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கிரேட் பிரிட்டன் உலகத்தின் பல பாகங்களில் அநேக காப்பு ஸ்தலங்களை வைத்துக் கொண்டிருக்கிறது.

சர்வதேச சங்கத்தைப் பற்றி உலகத்திலுள்ள எல்லா இனங்களும் வாதித்துக் கொண்டிருக்கும்போது, கிரேட் பிரிட்டன் ஆசியா கண்டத்தில் தன் நிலையை உறுதி செய்து கொள்கிறது. துருக்கியை நிராயுத பாணியாகச் செய்து விடுவதனுல், இந்திய நாட்டின் எல்லையை விஸ்தீரணப் படுத்திக் கொள்ளலாமென்று விரும்புகிறது.

---

சென்ற நாலரை ஆண்டுகளாக நடைபெற்றயுத்தம் சுதந்தரத்திற்காக என்று கூறப்பட்டது. எல்லாச் சமூகத்தாரும் சிறியரும் பெரியரும், கறுப்பரும் வெள்ளையரும் அனைவரும் சுதந்தரம் பெற்றுவிடுவர் என்று நேசக்கட்சியார் வாய்கூசாதுகூறினர். மற்றெல்லாச் சமூகத்தாரையும் போல் ஆப்பிரிக்காவிலுள்ள வெள்ளைத் தோலினர் அல்லாதார், தங்களுக்கும் நல்ல காலம் வந்துவிட்டதென்று நினைத்தார்கள். ஆனுல், அவர்கள் சுதந்தரத்திற்குப் பதிலாக ஆழ்ந்த அடிமைத்தனத்திற்கு உட்பட்டுவிட்டார்கள். ஜர்மன் ஆட்சியின்கீழ் ஒவ்வொரு சுதேசியும் வருஷத்தில்104 நாட்கள் கட்டாய ஊழியம் செய்ய வேண்டும். பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் வருஷத்திற்கு 84 நாட்கள் வேலை செய்யவேண்டும். பிரிட்டிஷ் ஆட்சியால் அருளப்பட்ட சுதந்தரம் இஃதொன்று தான். முன்னர் ஜர்மன் ஆட்சியின்கீழ் ஒரு சுதேசி தன் மனைவி மக்களுடன் வீட்டிலிருக்கலாம். இப்பொழுதுள்ள பிரிட்டிஷ் ஆட்சியின்படியோ ஒரு சுதேசித் தொழிலாளி தன் குடும்பத்தினின்றும் பிரிக்கப்படுகிருன். "எளிய சமூகத்தாரைப்" பிரிட்டன் காப்பாற்றும் முறைகளில் இஃதொன்று. (ஆசியன் ரேவ்யு.)

## சுதந்த்ரம்.

### ஸ்ரீமான் மாக்ஸ் வெய்னியின் அரிய மொழிகள்.

ஐரிஷ் தேசபக்தரான காலஞ்சென்ற டெர்ரன்ஸ் மாக்ஸ்வேயினி சுதந்தரத்தைப்பற்றிக் கூறுவதினின்றும் சில பாகங்கள் வருமாறு:—

மிருகபலத்தைக் கொண்டு வெற்றியடைவது ஆன்மசக்திக்குச் சரணடைவதற்கு ஈடாகாது. மேற் கூறியதை எவர் மறந்தாலும் நான் மறக்கமாட்டேன்.

நம்முள் குடிகொண்டிருக்கும் ஆன்மசக்தி, நாம் சுதந்தரம் அடைவதற்காகத் தூண்டுகிறது. உலக சம்பந்தமான விஷயம் பின்னையதாகும். உலகவாழ்க்கையில் இருக்கும் மனிதனுக்குச் சிலசக்திகள் கடவுளால் கொடுக்கப் பட்டிருக்கின்றன. அச்சக்திகள் ஆத்மாவைப் பொறுத்ததாயும் உடலைப் பொறுத்ததாயு மிருக்கின்றன. ஒவ்வொருவனும் தன்னிடமிருக்கும் சக்தியையும் தன் ஊரார்களின் சக்தியையும் விருத்தியாக்கிக் கொண்டு நல்ல நிலைமைக்கு வரவேண்டியது அத்தியாவசியம். சுதந்தர முள்ள நாட்டில் ஒருவனே தன் இயற்கையின் அற்புதங்களைக் கண்டு களித்து அவைகளைத் தன் இஷ்டப்படி செய்து கொள்கிறான். சுதந்தர மற்ற நாட்டில் எல்லாம் மாறு பாடாயிருக்கிறது. ஒரு தேசம் இன்னொரு தேசத்தைத் தன் கீழ் அடக்கி வைத்துக் கொண்டிருப்பதனுல் அடங்கியிருக்கும் தேசம் உலக விஷயங்களிலும், ஆத்ம விஷயங்களிலும் பயன் எய்தாது. தன் கீழ் அடங்கியிருக்கும் நாட்டை ஆள்வோர் கொள்ளை கொள்வதனுல் அந் நாட்டிற்கு அதிக பாதகம் ஏற்படுகிறது. அடக்கியாளும் தேசம் தன் கௌரவம் நிலைத்திருக்க வேண்டு மென்ற எண்ணத்துடன் அடங்கியிருக்கும் தேசம் ஆத்ம விஷயங்களிலும் முன்னேற்றம் அடைய விடுவதில்லை. நல்ல இராஜாங்கம் தன் குடிகளைச் செவ்வையான வழியில் நடத்தும். கெட்ட ராஜாங்கம் தன் குடிகளைக் கீழ்மையான வழியில் நடத்தும்.

நாம் பெருநோக்கத்துடன் தான் ஒரு காரியத்தைச் செய்ய ஆரம்பிக்கிறோம். நாம் நம் தேசத்தின் மீது கொண்டுள்ள பற்றுதான் நம்மைச் சுதந்தரத்திற்காகப் போராடச் செய்கிறது.

நாம் சுதந்தரத்திற்காகப் போராடுகிறோம். நாம் அயலார்களைப்போல் இருக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் போராடவில்லை; நாம் சுதந்தரம் அடையவேண்டுவதுதான் மானிடஜனனம் எடுத்ததன் கடமையாகும்.

ஒரு தேசத்தார் முழுமையிலும் சுதந்தரம் அடையவேண்டுமென்ற நோக்கம் கொண்டிருந்தால் அந்நோக்கம் சித்திபெறும். சுதந்தரம் அடைய வேண்டுமென்ற நோக்கம் கொண்டுள்ளவர்களை அடக்குமுறைகள் ஒன்றும் செய்யா. சுதந்தரம் அடையவேண்டுமென்று தீர்மானித்துவிட்டவன் சுதந்தரத்தை அடைந்தே தீர்வான்.

சுதந்தரம் அடைய வேண்டுமென்பதன் கடைசி நோக்கம் என்னை? உலகிலுள்ள சகலரும் சுதந்தர மடைந்து சந்தோஷத்துடன் வாழ வேண்டு மென்பதேயாகும்.

சுதந்தரம் அடைய வேண்டுமென்ற நோக்கங் கொண்டு சதா அதற்காக வேண்டியவைகளைச் செய்து வந்தால் அது கிடைக்காமல் போய்விடாது.

## ஆன்ம சக்தி.

ஆன்ம சக்தியைக் கொண்டுள்ளவன் எத்தகைய ஆபத்துகள் சம்பவித்தாலும் உண்மையையே கடைப்பிடித்து ஒழுகுவான். ஆன்ம சக்தியைக் கைக் கொண்டவனின் முக்கிய கருத்து உண்மையே நல்லது என்பதாகும்.

சுதந்தரத்திற்காகப் போராடும் வீரன் தான் உண்மைக்காக முன் அணியில் நிற்பதாக எண்ணிக் கொள்வதல்லாமல் தான் கஷ்டப்பட்டாகிலும் தன் பின்வரும் சந்ததியார் இக்கட்டுகளினின்று நீங்க வேண்டுமென்று கருதுகிறான்.

ஆயுதம் தரித்த ஒரு மனிதன் ஒரு கூட்டத்தைத் தடுக்க முடியாது. ஒரு படை அநேக படைகளைத் தாக்க முடியாது. உலகத்திலுள்ள எல்லா ஏகாதிபத்தியங்களிலிருக்கும் படைகள் ஒன்று சேர்ந்தாலும் உண்மையைக் கடைப்பிடித்து ஒழுகும் ஒரு மனிதனின் சக்தியைப் போக்க முடியாது.

சுதந்தரத்திற்காகப் போராடும் வீரன் ஒருவன் சுதந்தரம் அடைவதன் நிமித்தம் சுத்த வீரனைப் போல் காரியங்களைச் செய்வான். அவன் மிருகத்தனமான காரியங்களைச்செய்யாமல் ஆய்ந்தோய்ந்து தக்கபடி காரியங்களைப் பொறுமையுடன் செய்வான். பெருந்தன்மைதான் மனிதனுக்குக் கீர்த்தியைக் கொடுக்கக் கூடியது. சுதந்தரத்திற்காகப் போராடுகிறவன், தான் மாத்திரம் சுதந்தரம் பெற வேண்டுமென்ற நோக்கத்துடன் போராடாமல் தன், பகைவனும் நல்வழியில் திரும்ப வேண்டுமென்ற நோக்கத்துடனே போராடுகிறான்.

சுதந்தரம் அற்றநாட்டில் கீழான செயல்களெல்லாம் விருத்தியாகின்றன. ஜனங்கள் சுதந்தரத்திற்காக உயிரைவிடுவது, சூரியனைக் கண்டவுடன் கெட்ட வஸ்துக்கள் விலகிவிடுவதை ஒத்திருக்கிறது. சுதந்தரம் அற்றநாட்டிலும் ஜனங்கள் தாழ்ந்திருக்கும் நாட்டிலும் சிறியகேடுதி பெரிதாக விளைந்து விடுகிறது. தாழ்ந்திருக்கும் ஜனங்களைக் கடைத்தேற்றும் நோக்கத்தைக் கொண்டிருக்கிறவர்கள் சிறிய குற்றத்தைக்கண்டாலும் அதை உடனே அறவேஒழிக்கமுயலவேண்டும். சுதந்தரப்போராட்டத்தில்பலத்தைக்காட்டிலும்மனோநிலைதான் அத்தியாவசியமானது. நம் எண்ணங்களை நம்மனது அடக்கியாளவேண்டும். மனோதைரியங்கொண்டுள்ள மனிதனை யாரும் அசைக்க முடியாது. உண்மையான மனோதைரியங்கொண்டுள்ளவன் இறுதியில் வெற்றிபெற்றே தீர்வான். மிருகத்தனமான செயல்களில் ஈடுபடமாட்டான். மனோதைரியமுள்ளவன் உண்மையுடனும் பெரு நோக்கத்துடனும் நடந்து கொள்வான். நண்பர்காள்! நாம் நம் தேசத்தின் சுதந்தரத்திற்காகப் போராடுகிறோம். நாம் பிறந்தது சுதந்தரமடைவதற் காகவேயாம். நாம் வெற்றி பெற்றே தீருவோம்.

## சகோதரர்களும் பகைவர்களும்.

நம் பகைவர்களும் சகோதரர்கள் தான். நாம் அவர்களிடமிருந்து வேறுபட் டிருக்கிறோம்.

ஐயர்லாந்து சுதந்தரம் அடைய வேண்டுமானால் நமக்குள் ஐக்கியம் இருக்க வேண்டும். உலகமே புதிய சக்தி கொள்வதற்கு உலக முழுமையிலும் ஐக்கியம் ஏற்பட வேண்டும். உலகத்திலுள்ள அனைவரும் சகோதரர்என்ற எண்ணம் உதிக்க வேண்டும். இந்நோக்கத்தை நிறைவேற்ற ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு தேசமும் பாடுபட வேண்டும். நாம் சரியான பாதையில் சென்றால் அந்நோக்கத்தில் வெற்றி பெற்றே தீருவோம்.

நாம் நமக்குள் ஐக்கிய மடைந்துவிட்டால், சுதந்தரத்தை எளிதில் அடைந்து விடலாம்.

## பலத்தின் இரகசியம்

நாம் ஒவ்வொருவரும் பொறுமை, தைரியம், விடாமுயற்சி ஆகிய இவைகளைக் கையாள வேண்டும். இதை மனதில் இறுத்திக் கொண்டு நாம் வேலை துவக்க வேண்டும். நாம் செய்ய வேண்டிய தேசிய வேலையில், ஜனசார சீர்திருத்தம், மத விஷயம் ஆகிய இவைகள் அடங்கியிருக்கவில்லையென்று நினைப்பது தவறான காரியமாகும். மனிதன் எல்லா விஷயங்களிலும் ஈடுபட்டிருக்க வேண்டும். எல்லா வழியிலும் ஈடுபட்டிருப்பவன் சிறந்த தேசாபிமானி; சிறந்த போர்வீரன்; சிறந்த நகரவாசி ஆவான். ஒரு மனிதன் ஒரு விஷயத்தில் யோக்யனாகவும் இன்னொரு விஷயத்தில் அயோக்யனாகவுமிருக்க முடியாது. நகரவாசி தன் கடமையைச் செய்வதில் பரிசுத்தவானாகவும், சிறந்த நற்குணங்களை யுடையவனாகவுமிருக்க வேண்டும். சிறந்த ஒழுங்கு முறையை அநுஷ்டிப்பது சாலச்சிறந்ததாகும்.

# நமது தற்கால வேலை.

## இப்போது வேண்டுவது யாது?

மகாத்மாகாந்தி தம் "எங்இந்தியா" பத்திரிகையில் பின்வருமாறு எழுதுகிறார்:—

இம்மாத முடிவுக்குள், நாம் பெஜவாடாவில் செய்த தீர்மானங்களை அநுபோகத்தில் நிறைவேற்றாவிட்டால் அது தற்கொலை செய்துகொள்வதாகும். இனி ஒரு நிமிஷநேரங்கூட காலதாமதம் செய்யக்கூடாது. நாம் இதுவரை இருபது லட்சம் ரூபாதான் தண்டல் செய்திருக்கிறோம். அடுத்த மூன்றுவாரங்களுக்குள் நாம் 80 லட்சம் ரூபா தண்டல் செய்ய வேண்டும். இதைப் பூர்த்தி செய்வது கூடாதகாரியமென்று தோன்றக்கூடும். நாம் மும்முரமாய் வேலைசெய்தால் காரிய சித்தி அடைவோம் என்பதில் ஒரு சிறிதும் சந்தேகமில்லை. இந்தியாவிலுள்ள 21-மாகாணங்களும் தங்கள் தங்கள் சக்திக்குத் தக்கபடி உதவிசெய்தால் மீதிப்பணத்தைக் கூடிய சீக்கிரத்தில் சேர்த்துவிடலாம். பெஜவாடா தீர்மானத்தைப் போலொத்த தீர்மானம் இதுவரை ஜனங்களின் முன்னிலையில் செய்யப்படவில்லை. இந்தியாவிலுள்ள முப்பது கோடி ஜனங்களும் நமக்காதரவாயிருந்து போதிய இச்சாசேவகர்களும் இருப்பார்களேயானால் சுயராஜ்யம் போன்ற மகத்தான விஷயத்திற்கும் லோகமான்யரின் ஞாபகார்த்தமாகவும் ஒருகோடி ரூபாயை மிக எளிதில் சேர்த்து விடலாம். ஸ்திரிகள் இஷ்டப்பட்டால் தங்களுடைய நகைகளைக் கொடுத்தே ஒருகோடி ரூபாயைத் திரட்டிவிடலாம். குடிக்காரர்கள் குடிப்பதை நிறுத்திவிட்டு அப்பணத்தைக் கொடுத்தால் நலமாயிருக்கும். சுதேச நிகழ்ச்சியினால் நல்லலாபம் அடைந்திருக்கும் தொழிற்சாலை முதலாளிகள் 80-லட்சம் ரூபாயை ஒரு நாளில் சேர்த்து விடலாம். மார்வாடிகள் ஒருவிதக் கஷ்டமுமின்றி இப்பணத்தை ஒரு நாளில் கொடுத்துவிடலாம். பாடியர்கள், மெமானன்ஸ், பார்விகள், பனியர்கள் ஆகியஇவர்கள் இந்தப் பணத்தைக் கொடுத்துவிடலாம். இவர்களெல்லாரும் நல்ல நிலையிலிருக்கிறார்கள். பொதுஜனக் கட்சிகளுக்கு இவர்கள் இதுவரையில் திரவிய உதவிசெய்து வந்தார்கள். ஹிந்துவாசிகள் இஷ்டப்பட்டாலும் இப்பணத்தைக் கொடுத்துவிடலாம். இந்தியாவிலுள்ள தொழிலாளர்கள் இஷ்டப்பட்டால் ஒருமாதத்திய சம்பளத்தைக் கொடுத்துப் பணம் சேர்த்து விடலாம். எந்தெந்த வகுப்பினர் எம்மாதிரியான உதவிசெய்யக் கூடுமென்று நான் என் நண்பர்களுடன் ஆலோசனை செய்தேன். பின்னர் கீழ்க்கண்ட ஏற்பாட்டின்படி செய்யலாமென்று நான் யோசனை கூறினேன்.

1. மாதச்சம்பளம் பெறுகிறவர்கள் பத்தில் ஒருபாகத்தைக் கொடுத்துவிட வேண்டும்.

2. வக்கீல்கள், டாக்டர்கள், வியாபாரிகள் முதலானோர் மேமாதத்துடன் முடிந்த ஒரு வருஷத்தில் கிடைத்திருக்கும் சேரவருமானத்தில் பன்னிரண்டிலொருபாகத்தைக் கொடுக்கவேண்டும்.

3. நீர் நிலமுள்ளவர்கள் சொத்தின் மதிப்பில் 100-க்கு 2½ பாகம் வீதம் கொடுத்துவிடவேண்டும்.

4. மற்றவர்கள் ஆள் ஒன்றுக்கு நான்கணா வீதம் கொடுக்கவேண்டும்.

மேலே குறிப்பிட்டபடி ஒவ்வொருவரும் கொடுப்பார்களாயின் அநேககோடி ரூபா சேர்ந்துவிடும். எல்லாவகுப்பிலும் ஒத்துழையாதாரும் அவர்களிடம் அநுதாபம் உள்ளவர்களு மிருக்கின்றனர். ஒரு வகுப்புமாத்திரம்முழுமையிலும் ஒத்துழையாக்காரர்களாயில்லை. பணம் வருவதிலிருந்தே நம்முடைய உண்மையான கருத்து வெளிப்படவேண்டும். இம்மாதம் 30-ந் தேதிக்குள் நாம் அப்பணத்தைச் சேர்த்துவிடுவோம் என்ற நம்பிக்கை யிருக்கிறது.

இவ்வளவு தொகை எதற்காக என்று கேட்கப்படுகிறது. இதற்குப் பதில் இறுப்பது வெகு சுலபம். பொது ஜன நன்மைக்காகப் பணம் அத்தியாவசியமாய் வேண்டியிருக்கிறது. திலகர் சுயராஜ்ய நிதிக்காகத் தண்டல் செய்யப்படும் தொகையினின்று கைத்தறிகள் வாங்கப்படும். தேசியப் பாடசாலைகள் ஏற்படுத்தப்படும். இந்தியாவில் கைத்தறிகளை ஏற்படுத்துவது அத்தியாவசியமாகும். தேசியப் பள்ளிக்கூடங்களையும் ஏற்படுத்த வேண்டும். இந்தத் தொகைகளுக்குச் சரியான கணக்குக் கொடுக்கப்படு மென்பதற்கு என்ன நம்பிக்கை இருக்கிறதென்று கேட்கப்படுகிறது. ஸ்ரீமான்களான சோட்டாணியும் ஜமனலாலும் பொக்கிஷதாரர்களா யிருக்கிறார்கள். இவர்கள் மிக்க யோக்கியதையுள்ளவர்கள். ஸ்ரீமான் பண்டித மோதிலால் நேரு விசேஷ யோக்கியதையையும் பொறுப்பையும் கொண்டுள்ளவர்; அதிக அநுபவமும் கொண்டவர். தவிர 15 அங்கத்தினர்கள் அடங்கிய கமிட்டியொன்று மிருக்கின்றது. இக்கமிட்டியார் மாதமொரு முறை கூடி கணக்குகளைப் பரிசோதித்து வருகின்றனர். இப்பணத்தில் நாலில் ஒருபாகத்தை அகில இந்தியக் கமிட்டியார் செலவு செய்யப் போகிறார்கள். மற்றமூன்றுபாகம் ஸ்தலச் செலவுகளுக்காக மாகாணங்களில் வைத்துக் கொள்ளப்படும். ஒவ்வொரு மாகாணத்திலும் கணக்குகள் சரியானபடி பரிசோதிக்கப்படும். தவிர எல்லாக் கணக்குகளும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியால் நியமிக்கப் போகும் கணக்குப் பரிசோதகர்களால் பரீக்ஷை செய்யப்படும். பணத்தைச் சேர்ப்பது எவ்வளவு அவசியமாயிருக்கிறதோ அதைப்போல் அதிகமான அங்கத்தினர்களைச் சேர்க்க முயற்சிப் பதிலும், அதிகமான கைராட்டினங்களை உபயோகத்துக்குக் கொண்டு வருவதிலும் காலத்தைச் செலவழிக்க வேண்டும். இவைகளிலிருந்து தான் நாம் நிரந்தரமான வேலையைச் செய்கிறோம் என்பது புலனாக வேண்டும்.

எல்லா காங்கிரஸ்காரர்களும் கிலாபத் பிரசாரகர்களும் இம்மாதத்தில் கடைசி பத்து நாட்களில் எல்லா வேலையையும் விட்டுவிட்டு பெஜவாடா தீர்மானங்களை அமுலுக்குக் கொண்டு வருவதில் காலத்தைச்செலவழிக்கவேண்டும். உபந்யாசங்கள், கூட்டங்கள் வேண்டியதில்லை. வீட்டுக்கு வீடு சென்று பெஜவாடா தீர்மானத்தைச் செய்கையில் காட்ட வேண்டும்.

## அரசியல் வாழ்க்கை.

அரசியல் கூட்டமொன்றில் மனிதர்கள் கடுமையாக வாதம் புரிகின்றார்கள். பிரயோஜனமில்லாத விஷயங்களுக் கெல்லாம் அடிக்கடி சச்சரவு செய்கிறார்கள். பொறுமையுடன் இருக்கவேண்டியது அத்தியாவசியமானதாகும். நாம் சிலசமயங்களில் கொள்கையை விட்டுவிட்டு, கொள்கை ஒன்றும் இல்லாத விஷயங்களுக் கெல்லாம் போராடுகிறோம். உதாரணமாக ஒரு கூட்டம் நடைபெறுகிறது. ஒருதலைவர் விதிகளின் பிரகாரம் நடக்கச் சக்தியற்றவராய் இருக்கிறார். அப்போது அங்கத்தினர்கள் தலைவர் கட்டளைக்குக் கீழ்ப்படியாமல் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்கிறார்கள். சிலர் "அமைதி! அமைதி!" என்று கூச்சலிடுகிறார்கள். சிலர் விஷயத்தை விட்டு விட்டு வேறு விஷயத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆனதுபற்றி நாம் ஒரு கொள்கையின்படி நடக்க வேண்டும். நாம் எதற்காகப் போராடுகிறோம் என்பதையுன்னி தைரியமாகவும், நன்னோக்கத்துடனும்கௌரவமாகக் காரியங்களைச் செய்ய வேண்டும். இதையெல்லாம் ஆலோசித்து அதன்படி ஒவ்வொருவரும் நடந்து கொள்ள வேண்டும். பொது நன்மைக்காகப் பாடுபடும் விஷயத்தில் தைரியத்தையும் பொறுமையையும் புத்தி சாதுர்யத்தையும் இராணுவ வீரனைப் போலும் இராஜதந்திரியைப் போலும் விருத்தியாக்கிக் கொள்ளல் வேண்டும்.

"மாடர்ன் ரேவ்யூ"

## புதுவைக் கலைமகள் கழகம்.

காரியதரிசியிடமிருந்து.

நிகழும் துன்மதி வருஷம் ஆனி மாதம் 3-ந் தேதி (16-6-21) முதல் நடைபெற விருந்த புதுவைக் கலைமகள் கழகத்தின் பத்தாவது ஆண்டு விழாக் கொண்டாட்டம் சில அசந்தர்ப்பக் காரணமாகத் தள்ளிவைக்கப்பட்டுள்ளது.

நடைபெறுங் காலம் பின்னர் தெரிவிக்கப்படும்.

## மகாத்மாகாந்திக்கு உபசாரப்பத்திரம்.

ஜுன் 13-ந்தேதியில் கூடிய ஈரோடு தாலுக்கா போர்டு கூட்டத்தில் மகாத்மா காந்தி இவ்விடத்திற்கு வரும்போது அன்னாருக்கு உபசாரப் பத்திரமொன்று வாசித்துக் கொடுக்கப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டதென்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

## மாங்கனி மகோற்சவம்.

ஆனி மாதம் 6, 7-ந் தேதிகளில் காரைக்காலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கைலாசநாதஸ்வாமி சந்நிதியில் ஸ்ரீ காரைக்கால் அம்மையார் மாங்கனி மகோற்சவக் காட்சி நடைபெறும்.

# தொழிலாளர் நிலை.

## ஓர் அறிஞரின் உபதேசம்.

ஸ்ரீமான் எம். சிங்காரவேலு செட்டியார் பி. ஏ, பி. எல்., குவாயிலுள்ள மில் தொழிலாளர்களுக்கு மே 19-ந் தேதி தொழிலாளர் நிலைமையைப்பற்றி ஓர் அரிய உபந்யாசம் செய்தார். அது வருமாறு:—

நண்பர்காள்! உங்களைப் போலவேநானும் ஒரு தொழிலாளியாவேன். நான் வயல்களில் வேலை செய்கிறேன். நிலத்தை உழுகிறேன். செடிகளுக்குத் தண்ணீர்ப் பாய்ச்சுகிறேன். என் முதாதைகள் செம்படவ வம்சத்தைச் சேர்ந்தவர்கள். நான் உங்களுக்குப் புதியவனல்ல. இன்றுபிற்பகலில் நான் நேரஞ்சென்று வீடு போய்ச் சேர்ந்தேன். இன்று மாலையில் நான் உங்களுக்கு உபந்யாசம் செய்ய வேண்டுமென்று என் நண்பர் ஸ்ரீ வேதாசலம் அனுப்பிய கடிதத்தைக் கண்டேன். அதற்கிணங்க நான் தற்போது உங்கள் முன்னிலையில் தொழிலாளர் விஷயங்களைப் பற்றிச் சொல்ல முன் வந்துள்ளேன். சில வருடகாலமாக நான் தொழிலாளர்கள் விஷயங்களைப் பற்றிப் படித்து வருகிறேன். நீங்கள் உங்களை முன்னேற்றிக் கொள்வதற்காகச் செய்யும் போராட்டங்களையும் நான் கவனித்து வருகிறேன். அயல் நாடுகளிலிருக்கும் தொழிலாளர் நிலை எம்மாதிரியிருக்கிறதென்பதைப் பற்றியும் படித்துக் கொண்டு வருகிறேன். அவ்விடங்களிலுள்ள தொழிலாளர்களும் உங்களைப் போலவே கஷ்டப்பட்டுக் கொண்டு வருகின்றனர். ஐரோப்பா, அமெரிக்கா, ஜப்பான் இந்நாடுகளிலுள்ள தொழிலாளர்களும் உங்களைப் போலவே கஷ்டங்களை அநுபவித்து வருகின்றனர். ஆனதுபற்றி நீங்கள் உலகத்திலுள்ள தொழிலாளர்களுடன் நேசபாவம் பாராட்டுவது அவசியமென்று எனக்குத் தோன்றுகிறது.

### தொழிலாளர் நட்பு.

உலகத்திலுள்ள தொழிலாளர்களும் உங்களுக்கிருக்கிற நோக்கங்களையே கொண்டுள்ளார்கள். உங்களுக்கிருக்கப் பட்ட துக்கங்கள் அவர்களுக்கு மிருக்கின்றன. நீங்கள் கொண்டுள்ள எண்ணங்களைத் தான் அவர்களும் கொண்டுள்ளார்கள். நீங்கள் எதற்காகப் பயப்படுகிறீர்களோ அதற்காகத்தான் அவர்களும் பயப்படுகிறார்கள். உலகத்திலுள்ள தொழிலாளர்களும் நம்மைச் சேர்ந்தவர்கள் தான் என்று கருதவேண்டும். அதுதான் உங்கள் சங்கத்தின் முக்கிய நோக்கமாகும். எங்கெங்கு கஷ்டங்களிருக்கின்றனவோ அங்கெல்லாம் உங்கள் அன்பும் ஆதரவும் போகவேண்டும். சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை என்பதை யுன்னி அதன்படி நடக்கவேண்டும். நீங்கள் உங்கள் சங்க விஷயங்களிலேயே அழுந்திக் கிடக்காமல், உலகிலுள்ள மற்றத் தொழிற்சங்கங்கள் எம்மாதிரி யிருக்கின்றன என்பதையும் உணர வேண்டும்.

முதலில் நீங்கள் உங்கள் சொந்த சங்கத்தைப்பற்றிச் சிந்திக்க வேண்டும். எதற்காக, எக்காரணம் பற்றி, ஏன் சங்க மேற்பட்ட தென்பதைப்பற்றித் தெரிந்துகொள்ளுங்கள். பின்னர் சென்னை நகரிலுள்ள வெவ்வேறு சங்கங்களைப்பற்றித் தெரிந்து கொள்ளுங்கள். பின்னர்ச் சென்னை இராஜதானியிலுள்ள சங்கங்களைப் பற்றியும், பின்னர் இந்தியாவிலுள்ள சங்கங்களைப்பற்றியும் பின்னர் உலகத்திலுள்ள சங்கங்களைப்பற்றியுந் தெரிந்து கொள்ளுங்கள். பின்னர் அச்சங்கங்களின் சரித்திரத்தைப் பற்றியும் அவைகளின் அமைப்பைப் பற்றியும் தெரிந்து கொள்ளவேண்டும். இவைகளை யெல்லாம் தெரிந்துகொண்டால் தொழிலாளர் நட்பு என்ன வென்பதைத் தெளிவாக அறிந்து கொள்ளக் கூடும். இப்படி யிருந்தால் தான் உலகத்திலுள்ள தொழிலாளரனைவரும் ஒரே கூட்டாளிகள் என்பதை விளக்கக்கூடும்.

### தொழிலின் மேன்மை.

உலகத்துக்குத் தொழிலாளர் எவ்வளவு அவசியம் என்பதை நீங்கள் உணரவில்லையெனத் தெரிகிறது. தொழிலாளர் எவ்வளவு முக்கியம் என்பதை நம்நாட்டில் பரவிக் கிடக்கும் தொழிலாளர் இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் நன்கு உணரவில்லையோ லிருக்கிறது. நிலத்திலிருந்து கிடைக்கும் நெல்லும் சுரங்கங்களிலிருந்து எடுக்கப்படும் உலோக வர்க்கங்களும் தொழிலாளரைப்பொறுத்ததே. ரெயில்வேக்களும் நீராவிக் கப்பல்களும் தொழிலாளர் முயற்சியாலேயே ஓடுகின்றன. உலகத்தில் உற்பத்தியாகும் எல்லாப் பொருள்களும் தொழிலாளர்களையே பொறுத்திருக்கின்றன.

உலகத்தாருக்கு வேண்டிய சாமான்களையெல்லாம் தொழிலாளர்களே செய்கிறார்கள். உபயோகமுள்ள வஸ்துக்களும் உபயோகமற்ற வஸ்துக்களும் தொழிலாளர் கையினும் அவர்கள் அறிவினும் செய்யப்படுகின்றன. உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதனவாகிய உணவுப் பொருள்கள், உடுக்கும் ஆடைகள், வசிக்கும் வீடுகள் ஆகிய இவைகள் தொழிலாளர் கைகளினாலேயே செய்யப்படுகின்றன. சுருங்கக் கூறுமிடத்து உலகமே தொழிலாளர்களால் நடைபெறுகிறதென்று கூறலாம்.



## தொழிலாளர் நிலை

தற்போது தொழிலாளர் நிலை எம்மாதிரியிருக்கிறது? நீங்கள் எல்லாவற்றையும் உற்பத்தி செய்கிறீர்கள். ஆனால் உங்களுக்கு ஒன்றும் சொந்தமில்லை. உலகத்தில் செல்வம் பெருகிக் கிடக்கின்றது. ஆனாலும் உங்களுக்குப் போதுமானஉணவும், உடையும் இருப்பிடமும் கிடையா. இவைகளை யெல்லாம் உங்களிடத்தில் காண்கிறேன். இங்கிலாந்திலுள்ள தொழிலாளர்களும் உங்களைப் போலவே கஷ்டப் படுகிறார்கள். இத்தாலியாவிலுள்ள தொழிலாளர்களும், இதே மாதிரியான கஷ்டத்திற்கு உள்ளாகியிருக்கிறார்கள். எங்கு சென்றாலும் தொழிலாளர் கஷ்டப்படுவதையும் உணவுக்கும் ஆடைக்கும் இருப்பிடத்திற்கும் இல்லாமல் கஷ்டப்படுவதையும் காண்கிறோம். உண்மையாக ஆராய்ந்து மிடத்துத் தொழிலாளர்கள் கஷ்டத்திலேயே ஆழ்ந்துக் கிடக்கின்றார்கள். உயிர் வாழ்க்கைக்காகப் படாத பாடும் படுகின்றனர். சிறந்த ருஷ்ய மேதாவியான குரோபோத்கின் என்பவர் ஒவ்வொரு மனிதனும் தினமொன்றுக்கு ஐந்து மணிநேரம் வேலைசெய்தால் யாவரும் போதுமென்ற மனதுடையவர்களாய்வாழலாம் என்றார். நீங்கள் தினமொன்றுக்குப்பத்துமணி நேரம் மில்களில் வேலை செய்கிறீர்கள். இப்படி யிருந்தும் உங்களுக்கு உயிர் வாழ்வதற்குப் போதுமான ஊதியம் கிடைக்காமல் போய்விடுகிறது. தொழிலாளர்களின் நிலை தற்போது மிகக் கேவலமாயிருக்கிறது. ஏராளமான விலை பொருள்கள் இருந்தும் ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள். தொழிலாளர்கள் எல்லாவற்றையும் உற்பத்தி செய்கிறார்கள். இங்கிலாந்திலுள்ள பணத்தைச் சரிசமானமாகப் பங்கிட்டால் வாரமொன்றுக்கு ஒவ்வொரு தொழிலாளிக்கும் 150 ரூபாவீதம் தேறும், தற்போது இங்கிலாந்திலுள்ள நிலக்கரித் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்துள்ளார்கள். அவர்களுக்கு உயிர்வாழ்வதற்கு அத்தியாவசியமான கூலி கிடைக்காமையை முன்னிட்டு அவர்கள் வேலை நிறுத்தம் செய்துவிட்டார்கள். இங்கிலாந்தில் தற்போது நிலக்கரிப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. ரெயில்வேக்களுக்கும், கப்பல்களுக்கும் இங்கிலாந்தில் நிலக்கரி கிடைப்பது கஷ்டமாய்த்தா னிருக்கிறது.

இங்கிலாந்தில் அநேக ஆயிரம் வருடங்களுக்குப் போதுமான நிலக்கரி யிருக்கிறது. இங்கிலாந்து நிலக்கரியை உலகமுழுமைக்கும் விநியோகிக்கும் நிலையிலிருக்கிறது. இப்படியெல்லா மிருந்தும் தற்போது ஓர் ஆங்கிலேயனுக்கு வேண்டிய நிலக்கரி கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது. உற்பத்தி வருடா வருடம் அதிகப்பட்டுக்கொண்டே போக, உபயோகிக்கிறவனும், ஏன் கஷ்டப்படவேண்டியதாயிருக்கிறது? சாமான்களின் விலைவாசிகள் வருடாவருடம் ஏறிக்கொண்டே போகின்றன. ரூபாயின் மதிப்பு உயர்ந்து விடவில்லை. பத்துவருடங்களுக்கு முன் நாலணாவுக்கு வாங்கக்கூடிய சாமானைத்தற்போது ஒருரூபாய்க்கு மேல் கொடுத்து வாங்கவேண்டியதாய் நேர்கிறது. தொழிலாளர்கள் பொருள்களை அபரிமிதமாய் உற்பத்திசெய்கிறார்கள். அப்படியிருந்தும் அவர்களுக்குப் போதுமான அளவு பொருள்கள் கிடைப்பதில்லை. பொருள்களை உற்பத்தியாக்குவோனுக்கும், அதை வாங்கி அனுபவிப்பவனுக்கும் இடையில் மூன்றுவது மனிதன் ஒருவன் இருக்கிறான். இவன் தான் எல்லாவற்றிற்கும் சொந்தக் காரனாகப் பாவிக்கப்படுகிறான். இவன் நிலத்தில் விளையும் பொருள்களையும் சுரங்கங்களிலிருந்து தோண்டி யெடுக்கப்படும் உலோக வகைகளையும் ரெயில்வேக்களையும் கப்பல்களையும் தொழிற்சாலைகளையும் தன்னுடையதாக ஆக்கிக்கொண்டு தன்னிஷ்டம் போல் விலை ஏற்படுத்துகிறான். இதனால்தான் பஞ்சம், நோய், கஷ்டங்கள், அமைதியின்மை, வேலை நிறுத்தங்கள், இராஜீயப் புரட்சிகள் ஆகிய இவைகள் உலக முழுமையிலும் ஏற்படுகின்றன. இம் மூன்றுவது மனிதன்யார்? இவன்தான் முதலாளி.

## இந்தியத் தொழிற்சாலை.

ஸ்ரீமான் எம். சிங்காரவேலு செட்டியார் அவர்கள் எழுதுவது.

### பொது நிலை.

இந்தியத் தொழிற் சாலைகள் தற்போது பழைய நிலையிலிருந்து புதிய நிலைக்கு வந்து கொண்டிருக்கின்றன. இந்தியத்தொழிற்சாலைகளில் புதியதொரு சக்தி பிறந்திருக்கிறது. புதிய சக்தி எப்போதும் நிலைத்திருக்குமா வென்று, கவிஞன், தத்துவ சாஸ்திரி, இராஜதந்திரி, அரசியல் வாதி ஆகிய இவர்கள் சந்தேகங் கொள்கிறார்கள். தற்போது ஏற்பட்டிருக்கும் கல்விச்சாலைகள், அரசியல் கூட்டங்கள், நியாயஸ்தலங்கள் இன்னும் இவை போன்ற பிற, நன்மைக்குப் பதிலாகத் தீமையையே யுண்டாக்கி வருகின்றன. மேற்கத்திய நாகரிகம் பயன்படாமல் போகவே இந்திய மக்களின் ஜனநாயக, அரசியல், பொருளாதாரநிலை மாறிக்கொண்டு வருகிறது. மேல்நாட்டிய நோக்கங்களைச் சில வருடங்களுக்குமுன் உலகத்திலுள்ளவர்கள் பெரிதாகக் கருதி வந்தார்கள். வங்காள வாசிகளும் மேல்நாட்டு நாகரிகத்தில் ஒரு காலத்தில் மூழ்கிக் கிடந்தார்கள். அவர்களும் மேல்நாட்டு நாகரிகம் வெறும் பகட்டே என்று அறிந்துகொண்டு அதன்மேல் வைத்திருந்த மோகத்தை விட்டுவிட்டார்கள். மனித வர்க்கத்திற்குச் சந்தோஷத்தையும் திருப்தியையும் கொடுக்கக்கூடியது ஏதோ அதுதான் உண்மையான நாகரிகம் ஆகும். மனிதவர்க்கம் அறியாமையிலும் அந்தகாரத்திலும் மூழ்கிக் கிடக்கின்றது. இதனின்றும் எப்போது வெளிக் கிளம்புகிறதோ, அப்போதுதான் மனிதவர்க்கத்துக்கு நன்மை ஏற்படும். இந்தியா தற்போது சாதாரண வாழ்க்கையை விரும்புகிறது. சாதாரண எண்ணங்களை எண்ணுகிறது. சாதாரண சங்கங்களை விரும்புகிறது. ஏனென்றால் தான் சௌக்கியமாய் இருப்பதற்கேயாம்.

### இந்தியத் தொழிலாளர்.

தற்போது இந்தியாவில் தொழிலாளர்களின் நிலை திரிசங்கு சுவர்க்கத்தைப் போலிருக்கிறது. தொழிலாளிகளுக்குச் சொந்தமான நிலம் கிடையாது. வீரம்போய் விட்டது. பண்டைய கைத்தொழிலை விட்டுவிட்டு கூலிக்காக அடிமைப்பட்டிருக்கிறார்கள். வசிப்பதற்குச் சொந்த இருப்பிடமில்லை. குடிக் கூலிக்கிருக்கிறார்கள். அவர்களது வாழ்க்கை சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியதல்ல. ஒரு சிலர் நன்மையடைவதற்காகத் தொழிலாளி அநேக மணிநேரம் வேலைசெய்கிறான். ஒரு சிலர் நன்மையையும் சௌக்கியத்தையும் அடைவதற் குரியவைகளைத் தொழிலாளி செய்கிறான். அந்தோ! கடைசியில் அவன் நிலை என்ன? அவனைப் பற்றிக் கவனிப்பார் யாருமில்லை. அவன் எல்லாவற்றிற்கும் காரண கர்த்தனாயிருக்கிறான். அவனுக்கு ஒன்றும் கிடைப்பதில்லை. இவ்விஷயம் ஆச்சரியமானதல்லவா? இதற்குப் பரிகாரம் என்ன? தொழிலாளர் தன் சொந்த நிலத்தைப் பார்க்க வேண்டும். தன் பண்டைத் தொழிலைச் செய்ய வேண்டும், அப்போது தான் தொழிலாளிகளுக்குச் சுதந்தரம், நிலம், மேன்மை எல்லாம் வரும்.

### சுயராஜ்யம்.

ஆங்கிலேயர்களுக்குச் சுயராஜ்யம் எவ்வளவு பிரதானமோ அதுபோல் இந்தியர்களுக்கும் அது பிரதானம் என்பதை ஆங்கிலேயர்கள் ஏன் உணரவில்லை? நாம் மிருகத்தனமல்லாத வழியில் சுயராஜ்யத்திற்காகப் பாடுபடுவதைக் கண்டு அவர்கள் ஏன் கஷ்டப்பட வேண்டும்?

இங்கிலாந்து அந்நியர்களால் படையெடுக்கப் படுமென்று ஆங்கிலேயர்கள் பயப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் இங்கிலாந்தில் குழப்பங்களும், வேலை நிறுத்தங்களும் அமைதியின்மையும் ஏற்பட்டிருக்கின்றன. இப்படியெல்லாம் இருக்க, இந்தியாவில் சுயராஜ்யம் ஏற்பட்டால் பிறநாட்டார் இந்தியாவின்மீது படையெடுப்பார்; இந்தியாவில் அமைதியின்மை குழப்பம் ஏற்படுமென்றுஏன் எண்ண வேண்டும்? இங்கிலீஷ்காரன் அறியாமையினால் தான் மேற்கூறிய விதமாய் நினைக்கிறான். இங்கிலீஷ்காரனுக்கு அறியாமையும் ஆசையும் குடி கொண்டிருப்பதால் இம்மாதிரி யெல்லாம் எண்ணுகிறான்.

### ஒத்துழையா இயக்கத்தின் மேன்மை

ஒத்துழையா இயக்கம் அதிருப்தியை யுண்டாக்குகிறதா? சில தலைவர்கள் அவ்வியக்கம் அரசாங்கத்தாரிடம் அதிருப்தியைக் காட்டுகிறதென்று அபிப்பிராயப்படுகிறார்கள், நான் அம்மாதிரி நினைக்கவில்லை. மிருகத்தனத்தால் ஓர் அரசாங்கத்தை வீழ்த்த முடியாமல் இருக்கையில் அவ்வரசாங்கத்துக்குக் கோபத்தையுண்டாக்கக்கூடிய செயல்களைச்செய்வது நல்லதல்ல. நாம் அம்மாதிரியான அரசாங்கத்துடன் கூட்டுறவுகொள்ளாமல், நம்விஷயங்களை நாமாகவே திருத்திக் கொள்வதுதான் மிக முக்கியமானது. ஒரு கோடி ரூபாயையும் ஒருகோடி அங்கத்தினர்களையும் நாம் சேர்த்து இருபது லட்சம் கைத்தறிகளையும் கொண்டு வேலை செய்தால் நாம் சுயராஜ்யம் அடைந்தே தீருவோம். நாம் பஞ்சாயத்து சபைகளையும் நியாய ஸ்தலங்களையும் பாங்குகளையும் கல்விச்சாலைகளையும் ஏற்படுத்தவேண்டும். இதுதான் உண்மையான ஒத்துழையா இயக்கம் என்று எண்ணுகிறேன்.

"சுதர்மா"

## ஆசாம் தேயிலைத் தோட்டத் தொழிலாளர்.

ஆசாம் தேயிலைத் தோட்டத் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்ததில் அதிக மாறுதல் ஒன்றும் ஏற்படவில்லை, வேலை நிறுத்தம் செய்துள்ள தொழிலாளர்களுக்கிடையில் வாந்திபேதி பரவியிருக்கிறது. அநேக தொழிலாளர்கள் தங்கள் தங்கள் நாட்டிற்குத் திரும்பிச் சென்றுவிட்டார்கள்.

ராய்பகதூர் மசூம்தார் பகதூர் இராஜப் பிரதிநிதிக்குத் தொழிலாளர்களின் நிலைமையை எடுத்துரைத்தார். இராஜப் பிரதிநிதி தொழிலாளிகளிடம் அநுதாபம் காட்டினர், ஆசாம் தேயிலைத் தோட்டங்களிலிருந்து திரும்பி வந்த தொழிலாளர்களில் 315 பேர் வாந்திபேதியினால் இறந்துவிட்டார்கள். ஸ்ரீமான் ஸி. ஆர். தாஸ் தொழிலாளர்கள் அரசியல் கிளர்ச்சியை முன்னிட்டு வேலை நிறுத்தம் செய்யவில்லை யென்றும் தங்கள் தேசம் முன்னேற்றமடைய வேண்டுமென்ற எண்ணத்துடன் செய்தார்களென்றும் அறிக்கையில் கூறியிருக்கிறார். பின்னர் வந்த செய்தியில் எல்லாத் தொழிலாளர்களும் அவரவரிருப்பிடத்திற்கு அநுப்பப்பட்டார்களென்று தெரிகிறது.

## பக்கிங்ஹாம் மில்.

### 20-ந் தேதி வேலைநிறுத்தம் ஏற்படும்.

### தொழிலாளரின் எச்சரிக்கை.

பக்கிங்ஹாம் மில் தொழிலாளர், மில் மானேஜர் மூலமாய், பின்னி கம்பெனி மானேஜிங் டைரக்டரான மி-ர் டபிள்யூ ஈ. டர்னருக்குக் கீழ்வரும் கடிதத்தை அநுப்பியுள்ளார்.

நாங்கள் தங்களுக்கு 4-ந் தேதி எழுதிய கடிதத்தைக் கவனிக்கும்படியாய்க் கேட்டுக் கொள்கிறோம். அக்கடிதத்தில் கர்நாடிக் மில்தொழிலாளர்களின் இனம் சம்பளத்தைப் பறிமுதல் செய்தது அநியாயமென்றும் ராஜ சம்பந்தமான விதிகளை மாற்றச் செய்துள்ள தீர்மானத்தையும் ரத்துசெய்ய வேண்டுமென்றும் கூறியிருந்தோம். மேலும் நீங்கள் பக்கிங்ஹாம் ஆலையிலுள்ள விதிகளை மாற்றுவதில்லை யென்ற உறுதிமொழியையும் கொடுக்க வேண்டுமென்று கேட்டிருந்தோம்.

நீங்கள் அக்கடிதத்திற்குத் திருப்திகரமான பதில் அளிக்காவிட்டால் கர்நாடிக் மில் தொழிலாளர்களுக்கு அநுதாபம் காட்ட வேண்டுமென்ற நோக்கத்துடன் நாங்களும் வேலை நிறுத்தம் செய்வோமென்று கூறியிருந்தோம்.

நீங்கள் கர்நாடிக் மில் தொழிலாளர்களுக்கு நியாயம் செய்யாததற்காகவும் நாங்கள் 4-ந் தேதியில் எழுதிய கடிதத்திற்கு பதில் விடுக்காமல் இருப்பதற்காகவும் வருந்துகிறோம்.

கர்நாடிக் மில்லில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு அநுதாபத்தைக் காட்டுவதற்காக வேலை நிறுத்தஞ் செய்வதைத் தவிர வேறு வழியில்லை. 14-ந் தேதி மாலையில் சங்கக் கட்டிடத்தில் கூட்டங்கூடி எல்லாரும் 20-ந் தேதியில் வேலை நிறுத்தம் செய்து விடவேண்டுமென்று தீர்மானித்திருக்கிறோம். எங்களுடைய குறை நிவர்த்திக்கப்படும்வரை வேலை நிறுத்தம் நீடிக்கப்படும் என்பதை இதன் மூலமாகத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## இங்கிலாந்தில் தொழில் நிலை.

இங்கிலாந்தில் நிலக்கரித் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்துள்ளது இன்னும் சரியாக முடிவுக்கு வரவில்லை. உணவுப் பொருள்களின் விலை வாசிகள் குறைந்து விட்டதென்று கூறி முதலாளிகள் சண்டையின் போது கொடுக்கப்பட்ட கூலி விகிதங்கள் தற்போதும் கொடுக்கப்பட மாட்டாதென்றும் சண்டையின் போது கொடுக்கப்பட்ட கூலி விகிதங்கள் தற்போது குறைக்கப்படுமென்றும் கூறுகின்றார்கள். தொழிலாளர் தங்கள் கூலி குறைக்கப்படுவதற்கு இஷ்டப்படாமல் வேலை நிறுத்தம் செய்வதாக பயமுறுத்துகின்றனர்.

## ஐரோப்பியனின் மூர்க்கச் செயல்.

சென்னை அலுமினியம் தொழிற்சாலையைச் சேர்ந்த காதர் மொகிதீன் என்றதொழிலாளியை வோர்க்ஸ் சூபரின்டெண்டென்டான மி-ர் மெக் ஆல்பைன் 7-ந் தேதி பாதரட்சையால் உதைத்தாரென்று எழும்பூர் போலீஸ் கோர்ட்டில் பின்னவர் குற்றம் சாட்டப்பட்டுள்ளார்.

## இந்தியத் தொழிற் சங்கங்கள்

இந்தியாவிலுள்ள தொழிலாளர்களுக்கு வெளியிட்டுள்ள அறிக்கையில் அகில இந்திய தொழிலாளர் மகாநாட்டின் பொதுக் காரியதரிசியான ஸ்ரீ சாமன்லால், தொழிலாளர்கள் காங்கிரஸில் சேர்ந்து தங்கள் குறைகளை நிவர்த்தித்துக் கொள்ள முயற்சி செய்ய வேண்டுமென்று கூறியிருக்கிறார்.

## "லீடர்" பத்திரிகை.

டெமோக்ராட் பத்திரிகையில் பின் வரும் விஷயங்கள் காணப்படுகின்றன.

"லீடர்" பத்திரிகையை டாடா கம்பெனியார் வாங்கிவிட்டனர். அதன் கொள்கையையும் தங்கள் கொள்கைக்குத் தக்கபடி திருத்திக் கொள்வார்கள். தற்போது தலையங்கங்களை மிஸ்டர் ரஷ்புரூக் வில்லியம்ஸ் என்பவர் எழுதி வருவதாகத் தெரிகிறது. அவரே அப்பத்திரிகையின் ஆசிரியராயிருப்பாரா என்பதைச் சொல்லக் கூடவில்லை.

## சூரங்குடி விவேகாநந்த சபையார் கொழும்பு.

கொழும்புவாசிகளின் வேண்டுகோளுக்கிணங்க சென்னை ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாச அய்யங்கார் இலங்கைக்குச் சென்றிருந்தார். அப்போது கொழும்பு, சூரங்குடி விவேகாநந்த சபையார் அன்னாருக்கு உபசாரப் பத்திரமொன்றை வாசித்துக் கொடுத்தார்கள். அவ்வுபசாரப் பத்திரத்துக்குத் தக்கபதில் அளித்து, காந்தியடிகள், ஆன்மஞானத்தையும் ஆத்மசக்தியையும் ஜனங்களுக்குப் போதித்து வருகிறாரென்றும், காந்தியடிகளைப் பின்பற்றி நடத்தல் நலமென்றும், இந்தியாவில் சகோதர உணர்ச்சி அதிகமாகப் பரப்ப வேண்டுமென்றும் கூறினர்.

# அயல் நாடு.

## படையைக் குறைத்தல்.

இவ்வளவு படைதான் இருக்க வேண்டுமென்ற விஷயத்தைப் பற்றியோசிப்பதற்காக சர்வதேசங்களின் பிரதிநிதிகள் அடங்கிய மகாநாடொன்று கூட்டப்படும்.

## அமெரிக்காவில் வெள்ளம்.

### பலத்த சேதம்.

அமெரிக்காவிலுள்ள கிழக்கு கொலரோடா பிரதேசத்தில் பலத்த மழைபெய்ததனால் வெள்ளம் வந்து அதிக சேதம் ஏற்பட்டது. வெள்ளத்தினால் உயிரிழந்தவர்களின் தொகை ஆயிரத்திருநூற்று ஐம்பது பேர் ஆவர். இடி விழுந்ததனால் அநேக வீடுகள் தீக்கிரையானதல்லாமல் உணவுப் பொருள்களும் சேதமாயின.

வெள்ளத்தில் ஒரு ஸ்திரி தன் குழந்தையைத் தலையின் மேல் வைத்துக் கொண்டு கழுத்துவரையில் வரும் தண்ணீரில் இரவெல்லாம் நின்றுகொண்டிருந்தாள். காலையில் இராணுவ வீரர்கள் அவளைத் தப்புவித்தார்கள். மொத்த பொருள் நஷ்டம் பத்தாயிரம் டாலர் ஆகும்.

## இங்கிலாந்தில் இந்தியப்பண்டகசாலை.

ஹைகமிஷனர் ஆபிஸிலுள்ள பண்டகசாலை விஷயத்தைக் கவனிக்கும் டைரக்டா ஜெனரல் கூடிய சீக்கிரத்தில் விலகப்போகிறாரென்றும், அவருக்குப் பதிலாக இந்தியரொருவரை நியமிக்கவேண்டுமென்ற பலத்த கிளர்ச்சி செய்யவேண்டுமென்றும் "இந்து" பத்திரிகையின் லண்டன் நிருபர் தெரிவிக்கிறார்.

## கென்யாவில் இந்தியர்கள்.

### கூட்டுக் கமிட்டி.

### இந்தியர்கள் விஷயம்.

கிழக்காப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களின் நிலைமையைப்பற்றி விசாரிக்க நியமிக்கப்பட்ட கூட்டுக் கமிட்டியார் முன்னிலையில் மகமது ஹுசேன் மாலிக் என்பார் சாட்சியங் கொடுத்ததாகவும் அவர் இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கு இருக்கும்சதந்தரங்கள் கொடுக்கப்படவேண்டுமென்றும், இந்தியர்களுக்கு நிர்வாக இலாகாவில் உயர்ந்த உத்தியோகங்கள் கொடுக்கப்பட வேண்டுமென்றும் கூறினரென்று தெரிகிறது. ஆங்கிலோ இந்தியர்களின் எண்ணங் கொண்டுள்ள இரண்டு மூன்று அங்கத்தினர்கள் தவிர மற்றவர்கள் இந்தியர்களுக்குச் சம உரிமை கொடுக்கப்பட வேண்டுமென்று எண்ணுகின்றனர் என்று தெரிகிறது.

## அயர்லாந்து விஷயம்.

### ஹல்ஸ்டர் பார்லிமெண்ட்

### புதிய மந்திரி சபை.

வட ஐயர்லாந்தின் காமன்ஸ் சபையை ஐயர்லாந்தின் இராஜப் பிரதிநிதியான லார்டு பிட்சலான் என்பவர் ஜுன் 6-ந் தேதியில் திறந்து வைத்தார்.

ஜுன் 22-ந் தேதியில் அரசரும் அரசியாரும் ஐயர்லாந்தின் வட பாகத்திய பார்லிமெண்டைத் திறந்து வைப்பார்கள். வட ஐயர்லாந்து காமன்ஸ் சபையின் தலைவராக மேஜர் ஹூக் ஓ'நீல் என்பவர் தெரிந்தெடுக்கப்பட்டார். பின்னர் மந்திரி சபைக்கு அங்கத்தினர்கள் தெரிந்தெடுக்கப்பட்டார்கள்.

## இந்தியாவின் நிலை.

### காந்தி—ரெடிங் சம்பாஷணை.

### கேள்விக்கு ஸ்ரீ மாண்டேகுவின் பதில்.

இந்திய இராஜப்பிரதிநிதியான லார்டு ரெடிங் ஒத்துழையா இயக்கம் சம்பந்தமாக அநுதாபம் உள்ளவரென்று மிஸ்டர் காந்தி கூறியிருக்கிறார். அது உண்மைதானா வென்று காமன்ஸ் சபையில் வைகவுண்ட் ஈர்லன் கேட்டார்.

லார்டு ரெடிங் ஒத்துழையா இயக்கத்தில் அநுதாபம் காட்டவில்லை யென்று ஸ்ரீ மாண்டேகு கூறினர். பின்னுமொரு கேள்விக்குப் பதிலளிக்கையில் மிஸ்டர் காந்திக்கும் லார்டு ரெடிங்குக்கும் நடந்த சம்பாஷணையைப் பற்றிய முழு அறிக்கையையும் வெளியிடுவது கூடாத காரியமாகுமென்று ஸ்ரீ மாண்டேகு கூறினர்.

இந்தியாவில் அமைதியை யுண்டாக்க லார்டு ரெடிங் செய்து வரும் வேலையைப் புகழ்ந்தும், மிஸ்டர் காந்தி அலிசகோதரர்களுடன் கூடியிருப்பது நல்ல தல்லவென்றும் டெயிலி டெலிகிராப் பத்திரிகை கூறுகிறது.

ஒடுபெறநில்.

நவசக்தி

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே."—(அப்பர்)

சென்னை, 1921௵ ஜூன்மீ 17உ

## வறுமைக்குக் காரணம்?

உலகத்திலுள்ள மற்றெல்லா நாடுகளைக் காட்டிலும் இந்தியா இயற்கை அமைப்பில் ஆண்டவன் அருளை அதிகமாகப் பெற்றிருக்கிறதென்றே கூறவேண்டும். இயற்கை அரசி ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு குறையைச் செய்தே இருக்கிறாள். ஆனால் இந்தியாவில் எல்லாம் நிரம்பியிருக்கின்றன. அங்ஙனமிருந்தும் நம் நாட்டில் வறுமை நிறைந்திருப்பதேன்? நோய்கள் பெருகுவதேன்? காலனுக்கு அதிக வேலை ஏன்? இவ்வினைகளுக்குத் தக்க விடையளிக்க முயற்சி செய்ய வேண்டுவது ஒவ்வோர் இந்தியரின் கடமையாகும்.

கிறிஸ்து பிறவாதிருக்கு முன்னரே இந்தியா பிற நாடுகளோடு பண்டமாற்றல் செய்து வந்தது. இந்திய நாட்டின் பிரதிநிதிகள் பிறநாட்டு மன்னர் அவைகளில் வீற்றிருந்தார்கள். சந்திரகுப்தன் சந்நிதானத்தில் மெகாஸ்தனனும், பிந்து சாரனுடைய திருவோலக்க மண்டபத்தில் டெய்மகாஸ் என்பவனும் வேற்று நாட்டு வேந்தர்களின் பிரதிநிதிகளாய் அமர்ந்திருந்தார்கள். தமிழகத்தில் யவனர் சோனகர் முதலிய வேற்று நாட்டார் வாணிபம் செய்து வந்தார். இக்காலை இந்தியாவுக்கும் வேற்று நாடுகளுக்கும் எங்ஙனம் வியாபாரம் நடைபெற்று வருகிறதோ அது போலவே இற்றைக்குச் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரும் நடைபெற்று வந்தது. அங்ஙனமிருந்தும் இப்பொழுது நடைபெறும் வியாபார முறையினால் இந்தியா வறுமை நிலையை அடைந்து கொண்டு வருகிறது. பண்டைய வியாபார முறையினால் இந்தியா செழுமையடைந்து வந்தது. ஏன்?

தம் தாய்நாடாகிய இங்கிலாந்தைக் கொழுமைபெறச் செய்யவேண்டுமென்ற நோக்கத்துடனேயே பிரிட்டிஷார் இந்தியாவுடன் வியாபாரம் செய்துவந்தார். இங்ஙனம் இங்கிலாந்தைக் கொழுக்க வைப்பதற்கு இந்தியாவை வறுமைப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. கிழக்கிந்தியக் கம்பெனியார், முதலில் இந்தியாவில் வியாபாரம் செய்யவந்தபோது நடைபெற்ற சம்பவங்களை நினைப்பின் எந்த இந்தியனுடைய உள்ளமும் கலங்காமலிராது. பிரிட்டிஷ் அரசதந்திரிகளுக்குள் முதல்பதவியை வகிக்கும் 'கிளைவ்' ஒருவருடைய சரித்திரத்தை எடுத்துக் கொண்டாலே போதும். பொய்க் கையெழுத் திட்டு உமசந்திரரை ஏமாற்றிய இவ்வீரர், மீர் ஜாபரைச் சிம்மாதனத்தில் ஏற்றியதன் பயனாக இவரிடமிருந்து சுமார் இருநூறு அல்லது மூந்நூறு ஆயிரம் பவுன்கள் இனாமாகப் பெற்றார். இது தவிர கிளைவ் டச்சு கிழக்கு இந்தியக்கம்பெனியார் மூலமாகத் தன் குடும்பத்துக்கு நாற்றெண்பதினாயிரம் பவுனும் இங்கிலீஷ் கம்பெனியார் மூலமாக நாற்பதினாயிரம் பவுனும் அனுப்பினார். வேறுபல கம்பெனிகள் மூலமாக அனுப்பிய தொகைக்கு இன்னும் ஒழுங்கான கணக்கு ஆகப்படவில்லை. சென்னையில் மாத்திரம் கிளைவ் இருபத்தையாயிரம்பவுன் பெறுமான வைரங்கள் வாங்கினாரென்று சொல்லப்படுகிறது. இவருக்கிருந்த இந்திய செல்வத்திலிருந்து ஆண்டொன்றுக்கு இருபத் தேழாயிரம் பவுன் வரும்படி வந்துகொண்டிருந்ததென்று தெரிகிறது. மீர்ஜாபர் நவாப் பதவியை பெற்றதற்காகக் கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கு எண்ணூறு ஆயிரம் பவுன் இனாமாக அளித்தார். கிளைவ் என்பவருடைய ஆட்சியின் ஓர் அமிசத்தில் மாத்திரம், இவ்வளவு பணம் இந்தியாவினின்றும் இங்கிலாந்துக்குச் சென்றதென்றால் கம்பெனியின் ஒவ்வொரு வேலைக்காரரும் சொந்த வியாபாரம் செய்து ஏராளமான பணத்தைச் சேகரித்துக் கொண்டு சென்றார்கள் என்னும் பொழுது நாம் என்னென்று நினைக்கவேண்டியிருக்கிறது? டாக்கா மஸ்லின் துணி நெய்யப்படாமல் நின்று போனது எப்பொழுது? கிழக்கிந்தியக்கம்பெனியார் தோன்றிச் சுமார் ஐம்பது ஆண்டுகளுக்குள் இந்தியர்களுடைய கைத்தொழில், வியாபாரம் முதலிய யாவும் கொலைசெய்யப்பட்டன. மற்றும் எந்த அரசாங்கமும் தன் நன்மைக்கு உபயோகியாத ஒரு வியாபார முறையைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்தியா விஷயத்தில் அநுசரித்து வந்திருக்கின்றனர்.

கிழக்கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்த கிளைவ் முதலாயினோர் இந்தியாவிலிருந்து செல்வம் எடுத்துக்கொண்டு போனதால் மட்டும் இந்தியா வறுமை நிலையை யடைந்து விட்டதென்று நாம் கூறவில்லை. ஆனால் இந்தியாவின் வறுமைக்கு ஏற்பட்டுள்ளபலகாரணங்களுள் இஃதும் ஒன்றாகும் என்பதையே நாம் வலியுறுத்துகிறோம்.

மற்றும், உலகத்தில் எந்த நாகரிக அரசாங்கத்திலும் கொடுக்கப்படாத உயர்ந்த சம்பளம் இந்தியாவில் அதிகார வர்க்கத்தினருக்குக் கொடுக்கப்படுகிறது. இதைப்பற்றி நாம் பன்முறை கூறியிருக்கிறோமாதலின் ஈண்டு விரித்தெழுதப் போவதில்லை. ஆனால் இங்ஙனம் ஆயிரம் ஆயிரமாகக் கொட்டிக்கொடுக்கும் சம்பளம் எங்குச்செல்கிறது என்பதை மாத்திரம் நேயர்கள் ஆராய்ந்து பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

இந்தியாவின் இராணுவச் செலவை வறுமைக்கு மற்றொரு முக்கிய காரணமாகக் கூறலாம். நமது பிரிட்டிஷ் அரசாங்கத்தார் வீரத்திற்கு நிலைக்களமாயிருந்த இந்தியாவை அயல்நாட்டுப் படைகள் பாதுகாக்கவேண்டிய நிலைக்குக் கொண்டுவந்துவிட்டனர். இந்திய நாடு அநேக படையெடுப்புகளைத் தாங்கி நின்றபோதிலும் தன் வீரத்தைச் சுமார் முந்நூறு ஆண்டுகள் முன்னர் இழவாமலிருந்தது. ஆனால் பிரிட்டிஷ் ஆட்சி தோன்றியதும் இந்திய வீரம் மறையத் தலைப்பட்டது. பிரிட்டிஷாருடைய பாதுகாப்பின்றி நாம் இங்கு வாழ முடியாது என்ற நிலைக்கு வந்துவிட்டோம். பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் தோன்றுவதற்கு முன் நம்மை எந்நாட்டுப் படைகள் காப்பாற்றினவோ தெரியவில்லை.

இந்தியாவின் வறுமைக்குப் பிரிட்டிஷார் காரணர் என்று கூறும் நீங்கள் முகம்மது கஜினி முதலான முஸல்மான் அரசர்கள் படையெடுத்துச் செல்வத்தை வாரிக்கொண்டு சென்றதை ஏன் குறிப்பிடவில்லை என்று சிலர் நம்மைக் கேட்கக்கூடும். கஜினி முகம்மது, முகம்மது கோரி, தாமர்லேன், நாதர்ஷாமுதலாயினோர் இந்தியாவிலிருந்து ஏராளமான செல்வத்தை எடுத்துக்கொண்டு போயினர் என்பதை நாம் அங்கீகரிக்கிறோம். அவர்களால் எடுத்துக்கொண்டு போகப்பட்ட செல்வமும் பிறவும் இந்தியாவுக்கே மறுபடியும் வேறொரு விதமாக விநியோகிக்கப் பட்டன. மற்றும் திடீரென்று ஒரு முறை வந்து அகப்பட்டதை வாரிக் கொண்டு போவதற்கும் ஓரிடத்திலேயே நிலையாக இருந்து பொருளைச் சேகரிப்பதற்கும் வேற்றுமை உண்டு. மொகலாயர் ஆட்சி அந்நிய ஆட்சி என்று சிலர் கூறக்கூடும். வாதத்தின் பொருட்டு அதனை உண்மையென்று வைத்துக் கொள்வோம். ஆனால் மொகலாய அரசாங்கத்தின் வருவாய் அனைத்தும் இந்தியாவின் நன்மைக்காகவே செலவழிக்கப் பட்டது. அரசாங்கத்தின் வருவாயில் ஒரு பாகமேனும் எந்த விதமாகவும் வேற்று நாடுகளுக்குச் சென்று விடவில்லை. அதனால் நாட்டின் வளமை குறையாமலிருந்தது; ஜனங்கள் பசிப்பிணியை அதிகமாய் அறியாமல் இருந்தார்கள். ஹிந்து அரசர்களின் கீழ் முஸ்லீம்களும் முஸ்லீம் அரசர்களின்கீழ் ஹிந்துக்களும் உயர்ந்த பதவிகளைப் பெற்று வாழ்ந்தார்கள். அக்பர் அரசாட்சியொன்றே இக் கூற்றுக்குப் போதிய சான்றாகும்.

மேலே கூறியவாற்றான், இந்தியாவின் வறுமைக்குக் காரணம் யாதென்பதை நாம் கூறாமலே நேயர்கள் அறிந்து கொண்டிருப்பார்கள் என்று நினைக்கிறோம். இந்தியாவின் தற்போதைய பொருளாதார நிலைமையையும் அக்பர் ஆட்சிகாலத்துப் பொருளாதார நிலைமையையும் ஒப்பிட்டுப் பார்த்தால் மேலே கூறப்பட்ட உரைகளின் உண்மை நன்கு புலனாகும்.

மேலே கூறப்பட்டன வற்றைத் தவிர்த்து இந்தியாவின் வறுமைக்கு இந்தியரே ஒரு விதத்தில் காரணமாகவும் இருக்கின்றனர். மேனாட்டு நாகரிகப் பேயே நம்மை இவ்வறுமைக் குழியில் தள்ளிவிட்டது என்று நாம் பகிரங்கமாய்க் கூறுகிறோம். கிராம வாழ்க்கையை நடத்தும் ஒருவருக்கு நேரும் செலவையும் பட்டின வாழ்க்கையை நடத்தும் ஒருவருக்கு நேரும்செலவையும் ஒப்பிட்டுப் பார்ப்போமாயின், மேனாட்டு நாகரிகம் நம்மை எந்நிலைக்குக் கொண்டுவந்து விட்டிருக்கிறது என்பது தெரியவரும். இந்த நாகரிக மயக்கத்தினின்று நீங்கி நாம் பண்டைய வாழ்க்கையை அநுசரிக்க முற்பட்டால் அஃதொன்றே நம்வறுமையில்ஓர் அமிசத்தையேனும் களைந்துவிடும் என்பது திண்ணம்.

## தென்னாட்டிற்கு ஒரு வேண்டுகோள்.

இந்திய மக்களின் பிரதிநிதி சபையான இந்திய தேசீய மகாநாட்டின் முதல் ஆரம்பத்திற்குச் சென்னையிலேயே அடிகோலப்பட்டது. ஆதலின், இந்திய தேசீய மகாநாட்டினிடத்தில் சென்னை மாகாணம் ஒரு தனி உரிமை பாராட்ட இடமிருக்கிறது. ஒரு குடும்பத்தில் மூத்த புதல்வன் எங்ஙனம் தன் பெற்றோர்களுக்குச் செய்ய வேண்டிய பணிவிடையை ஏற்றுக்கொள்ள அதிக உரிமை பெற்றிருக்கிறானோ அதுபோலச் சென்னை மாகாணம், இந்திய தேசீய மகாநாட்டிற்கு அதிகமாகக் கடமைப்பட்டிருக்கிறது என்று கூறவேண்டும். சென்னை மாகாணம் இந்த மாதம் முப்பதாந் தேதிக்குள் ஆறரை லக்ஷம் ரூபாயும் ஆறரை லக்ஷம் அங்கத்தினர்களும் சேர்த்துக் கொடுக்க வேண்டுமென்று இந்திய தேசீய மகாநாடு கட்டளையிட்டிருக்கிறது. சென்னை மாகாணம் "பின்னடைந்த மாகாணம்" என்று பெயர் பெறுவதில் அதிக விருப்பம் கொண்டிருக்கிறதோ என்னவோ தெரியவில்லை. ஜூன் மாதம் முடிவடைய இன்னும் சுமார் பத்து நாட்களே இருக்கின்றன. திலகர் சுயராஜ்ய நிதிக்கு இன்னும் ஐம்பதினாயிரம் ரூபா சேரவில்லை. நாட்டின் தற்போதைய வறுமை நிலையை உத்தேசித்து ஒரு கோடி ரூபா எதிர்பார்த்தல் முடியாதென்று சிலர் கூறக்கூடும். ஆனால் இந்த ஒரு கோடி ரூபாயையும் ஒரு பார்சி கனவானோ ஒரு மார்வாரியோ மனம் வைத்தால் கொடுத்துவிடலாம். கொடுக்கச் சித்தமாகவும் பலர் இருக்கின்றனர். ஆனால் தேசீய மகாநாட்டின் ஆணை நாடுமுழுவதும் தெரியவேண்டு மாதலினாலும், இப்பொழுது நம் நாடு எந்தநிலையிலிருக்கிறது என்பதையும் எதற்காக இந்தப்பணம் வசூலிக்கப்படுகிறதென்பதையும் ஒவ்வொருவரும் அறிய வேண்டு மாதலினாலும் அனைவரும் இந்நிதிக்குப் பொருளுதவி செய்ய வேண்டுமென்று அறிஞர் எண்ணினர். ஒத்துழையா இயக்க சம்பந்தமாக வேலையை விட்டுவிடும் வக்கீல்களுக்கு உபகாரமாக ஒரு லக்ஷம் ரூபா உதவி செய்தவரும், நாகபுரி மகாநாட்டின் வரவேற்புக் கூட்டத் தலைவருமாயிருந்த சேத் ஜாமன்லால் ஒருவரே இந்தநிதிக்கு வேண்டியபொருளை உதவி விடுவார். ஆனால் நாட்டுணர்ச்சி யாண்டும் பரவவேண்டுமென்ற பெருநோக்கங் கொண்டே எல்லாரிடமிருந்தும் திலகர் சுயராஜ்ய நிதிக்குப் பணம் பெற வேண்டுமென்று பலர் நினைத்தனர். ஆதலின் இந்திய இரத்தம் ஓடப்பெறும் ஒவ்வொருவரும் இந்நிதிக்கு உடனே பொருளுதவி செய்யவேண்டு மெனக் கேட்டுக்கொள்கிறோம்.

தமிழ் நாட்டில் அநேக லக்ஷம் ஜனங்கள் இருக்கிறார்கள். இவர்களில் பத்தில் ஒருவர் ஒரு ரூபாவீதம் உதவினும் அநேக லக்ஷம் ரூபா இதுவரை சேர்ந்திருக்க வேண்டும். ஆனால் இதுவரை ஐம்பதினாயிரம் ரூபாய்க்கும் வழியில்லை யென்பதை நோக்கத் தமிழ் நாட்டவர் எவரும் தலைகுனியாமலிரார். இந்திய தேசீய மகாநாட்டிற்கு ஆறரைலக்ஷம் அங்கத்தினர்கள் தமிழ் மாகாணத்திலிருந்து சேர வேண்டும். இதுவரை ஒரு லக்ஷம் அங்கத்தினரும் சேரவில்லை. ஆதலின் மிகுதியாயுள்ள பத்து நாட்களிலேனும் தமிழ் நாடு, தன் உறக்கத்தினின்றும் எழுந்து சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர்க் கை தூக்கி விட்ட காங்கிரஸ் மகா சபையை இப்பொழுதும் ஆதரித்து சிறக்க வேண்டுமென்று அதனைக் கேட்டுக் கொள்கிறோம்.

## குடிக்கூலியின் அநியாயம்.

பழைய சென்னைச் சட்டசபையில் ஸ்ரீமான் அருமைநாதம் பிள்ளை அவர்களுடைய குடிக்கூலி நிர்ணய மசோதா நிறைவேறாமற் போனதன் பிறகு வீட்டுச் சொந்தக்காரர் அநியாயமாய், தெய்வம் ஒன்றிருக்கிற தென்பதை மறந்தவராய்-எளிய ஜனங்களின்மீது சிறிதும் இரக்கமில்லாதவராய்க் குடிக்கூலியை உயர்த்தி வருகின்றனர். நாம் எவ்வளவு தூரம் உயர்த்திக் கொண்டு சென்றாலும் நம்மைக் கேட்பவரில்லை யென்பதை அறிந்த வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு இன்னும் அதிக தைரியம் பிறந்திருக்கிறது. தகப்பனார் அல்லது பாட்டனார் சம்பாதித்து வைத்த இரண்டு அல்லது மூன்று வீடுகளையுடைய கனவான்கள் அவ்வீடுகளினின்று வரும் குடிக்கூலியைக் கொண்டே டாம்பீக வாழ்க்கை நடத்தி வருகிறார்கள். மற்றும் பலர், இன்றைக்கு ஒரு வீட்டை வாங்கி, நாளைக்கு நூறு ரூபா இலாபம் வைத்துக் கொண்டு வேறொருவர்க்கு விற்று இப்படியே ஜீவனம் செய்து வருகின்றனர். அரசாங்கத்தார் நம்மைக் கேட்கப் போவதில்லையென்ற



எண்ணம் இவர்களுக்கு இருக்கிறதென்பதை அங்கீகரிக்கிறோமாயினும் தெய்வம் ஒன்று இருக்கிறதென்பதை இவர்களுக்கு ஞாபகமூட்டுகிறோம்.

குடித்தனக்காரர் ஒருவர், ஒரு வீட்டைக் காலி செய்து விட்டால் உடனே ஒரு ரூபா அல்லது இரண்டு ரூபா உயர்த்த வேண்டியது அவசியமென்றே வீட்டுச் சொந்தக்காரர் கருதுகின்றனர். குடிக்கூலி விஷயத்தில் கண்ணுங் கருத்துமாயிருக்கும் இவர் வீட்டைப் பழுது பார்ப்பது பாவச்செயலே யென்று கருதுகின்றனர்! சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டில் குடிக்கூலியானது நூற்றுக்கு எழுபத்தைந்து வீதம் உயர்ந்திருக்கிறது. முன்னர் ஒரு சிறிய அறைக்கு இரண்டு ரூபா அல்லது இரண்டரை ரூபா கொடுக்கப்பட்டு வந்தது. இப்பொழுது ஐந்து ரூபாய்க்கு அகப்படுவது அருமையாயிருக்கிறது. குடிக்கூலியின் உயர்வினால் மத்திய வகுப்பார் படும்பாடு எழுதிமுடியாது. அதிக ஏழைகளாயுள்ளவர்கள் ஆகாயவாணியையும் பூமிதேவியையும் சாட்சியாகக் கொண்டு மர நிழலிலும் சுவர் ஓரத்திலும் வேறு பொது இடங்களிலும் தங்கள் வாழ்க்கையை நடத்தி விடுகிறார்கள். செல்வர்களுக்குச் சொந்த வீடுகள் இருக்கின்றன. எனவே துன்பப்படுவோர் சொற்ப சம்பளம் பெறும் மத்திய வகுப்பாரும் தொழிலாளருமே யாவர். இவர்களுடைய வருவாயில் மூன்றில் ஒரு பங்குக்குக் குறையாது குடிக்கூலிக்கே அர்ப்பணம் செய்து விட வேண்டியதாயிருக்கிறது. பிறகு வாழ்க்கையை நடத்துவதெப்படி? வயிற்றில் ஈரத்துணியை மடித்துப் போட்டுக் கொள்வதோ? வீட்டுச் சொந்தக்காரர்கள் இனியேனும் தருமத்திற்குக் கட்டுப்பட்டு, சத்தியத்திற்கு அஞ்சி, குறித்த ஓர் அளவுக்கு மேல் குடிக்கூலியை உயர்த்தக் கூடாதென்று தீர்மானித்துக் கொண்டால் நலமாயிருக்கும். அல்லது குடிக்கூலிக்காரர்களேனும் இதைப்பற்றித் தீவிரமான கிளர்ச்சி செய்ய வேண்டும். ஸ்காத்லாந்தி லுள்ள கப்பல் தொழிளாரிற் சுமார் பதினாயிரம் பேர் ஒரு சமயம், குடிக்கூலி மிக அதிகமாயிருப்பதைக்கண்டு, குடிக்கூலி குறைக்கப்பட்டாலன்றி நாங்கள் இனி எந்த வீட்டிலும் குடியிருக்க மாட்டோம் என்று முழக்கத்துடன் கொடி பிடித்து ஊர்வலம் வந்தார்கள். சென்னையிலும் அந்நிலைமை ஏற்படுமோ?

## இடியேறு

### போலீசாருக்குப் புதிய ஆயுதம்.

"விரோத எண்ணத்துடனிருக்கும் கூட்டங்களையும் சட்டத்தை மீறிக் கூடும் கூட்டங்களையும் இன்னும் நன்றாக அடக்கச் சென்னைப் போலீசாருக்குப் பித்தளைப் பூண் போட்ட தடிகள் (ஆயுதமாகக்) கொடுக்கப்படும்" என்று விளம்பர சபையார் தெரிவிக்கின்றனர். எந்த விதமான ஆபத்தை எதிர்நோக்கி இந்தப் புதிய ஆயுதத்தைப் போலீஸாருக்கு அரசாங்கத்தார் அளித்தனரோ தெரியவில்லை. சென்னையில் "சட்டத்தை மீறிக் கூடும் கூட்டங்கள்" அதிகமாகின்றன, என்று உதகமண்டலத்திலிருந்து அரசாங்கத்தார் அறிந்திருக்கின்றனரோ?

### உண்ணா விரதம் பூண்டிருக்கிறார்.

பிஜியிலிருந்து இப்பொழுது இந்தியாவுக்கு வந்திருக்கும் கூலிக்காரர்கள் மறுபடியும் பிஜிக்குத் திரும்பிச்சென்று முன்போல் துன்புறக் கூடாதென்றும் இவர்களுக்கு இந்தியாவிலேயே தக்க வாழ்க்கை தேடிக்கொடுக்கவேண்டுமென்றும் இது நிறைவேறும் வரை உண்ணாவிரதம் பூண்டிருப்பதாகவும் சுவாமி வசிஷ்டமுனி நிச்சயித்திருக்கிறார். இப்பொழுது திரும்பி வந்திருக்கும் கூலிகள் மறுபடியும் பிஜிக்குச் சென்றால் இந்தியாவின் மானம் குலைந்ததுபோலாகுமென்று சுவாமிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். இதை நாம்முற்றிலும்ஆதரிக்கிறோம். இந்தியர்கள், வெளி நாட்டுக்குச் சென்று துன்புற்றுத் திரும்பிய சகோதரர்கள் மீது போதிய கருணை காட்டி இந்தியாவின் மானத்தைக் காப்பார்களாக.

### வெள்ளையனோ?

சார்ஜண்ட் கோல்ஸ் என்பவன் ஒரு சுதேசியின் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்து இயமனுலகுக்கு அனுப்பி விட்டான். சார்ஜண்ட் கோல்ஸ் என்பவன் பின்னர் விசாரிக்கப்பட்டு விடுதலை செய்யப்பட்டான். இதில் நமக்கு ஆச்சரியம் ஒன்றுமில்லை. இந்தியரைக் கொன்ற வெள்ளையர் விடுதலை அடைவதையும், வெள்ளையர் மனம் புண் படும்படி நடந்த இந்தியர் துன்பத்திற்குள்ளாவதையும் நாடோறும் கேட்டு நம் காது செவிடுபட்டிருக்கிறது. லார்ட் ரேடிங் இந்தியாவில் இனி எவ்விதமான வகுப்பு வித்தியாசங்களும் பாராட்டப்பட மாட்டா என்று சீதமலையிலிருந்து குளிர்ந்தமொழிகளால் அருள்கிறார். ஆனால்—? ஆனால்—?

### ஸ்ரீமான் சாஸ்திரியார்.

சத்தியமுள்ள இடத்தில் வெற்றியுண்டு என்பது ஆன்றோர் முதுரை. ஸ்ரீமான் ஸ்ரீநிவாச சாஸ்திரியார் இந்தியாவில் ஒத்துழையாமைக்கு விரோதமாகப் பல உபந்நியாசங்கள் புரிந்தார். அப்பொழுது ஜனங்கள் இவர் கொள்கையில் தங்களுக்கு இருக்கும் வெறுப்பைக் காட்டாமலில்லை. இங்கிலாந்து சென்றும், இவர் ஒத்துழையா இயக்கத்தைத் தாக்காமல் விடவில்லை. வழக்கம்போல் அக்கூட்டத்திலிருந்த மாணவரிற் பெரும்பாலோர் இவரைப் பேசவொட்டாமல் பலவாறாகத் தடுத்தனர் என்று இந்தவாரத்து 'ஹிந்து' பத்திரிகையில் விரிவானசெய்தி வெளிவந்திருக்கிறது. இதனால், தம்முடைய கட்சி உலகத்தின் எந்தப் பாகத்திலும் அங்கீகரிக்கப்படவில்லை யென்பதை ஸ்ரீமான் சாஸ்திரியார் உணர்ந்துவிட்டால் போதும். நாம் வேண்டுவது அதுவே.

### ஒரு விநோத கலெக்டர்.

காந்தி குல்லாயைக் கண்டு கோபங் கொண்ட பிஜபூர் ஜில்லா கலெக்டர் ஸ்ரீமான் ஹெண்டர்சனைப் பற்றி நேயர்கள் ஞாபகம் வைத்திருப்பார்கள். இவர் இந்திய அதிகார வர்க்க சரித்திரத்தில் பெரும் பெயர் எடுக்க வேண்டுமென்ற விருப்பம் உடையவர் போல் தெரிகிறது. சின்னாட்களுக்கு முன், மதுவிலக்குப் பிரசாரம் செய்யும் இரண்டு இச்சா சேவகர்கள் ஒரு கனவானின் சாட்சியத்தை ஆதாரமாகக் கொண்டு போலீஸாரால் கைதுசெய்யப்பட்டார்கள். இந்த வழக்கு ஸ்ரீமான் ஹெண்டர்சனிடத்தில் விசாரணைக்கு வந்தது. வழக்கைத் தொடுத்தவர் வழக்கைத் திரும்பப் பெற்றுக் கொள்ள உத்தரவு கேட்டார். ஆனால் ஸ்ரீமான் ஹெண்டர்சன் அதற்கு இணங்காமல், பிள்ளைகளுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டுமென்று சொல்லி இருவரும் ஒரு வருஷ நன்னடக்கை ஜாமீன் கொடுக்க வேண்டுமென்று உத்தரவு செய்திருக்கின்றனர்! பிறகு என்ன நடக்கும்? ஸ்ரீமான் ஹெண்டர்ஸன் போகும் போதும் வரும்போதும் அவரை உறுத்துப் பார்த்தவர்கள் தண்டிக்கப்படுவோர்களோ?

### மீண்டும் சத்தியாக்கிரகம்.

முல்ஷி பேட்டையைச் சேர்ந்த ஐம்பத்து நான்கு கிராமவாசிகள் ஒருங்குகூடி, தாதா கம்பெனியாரும் அரசாங்கத்தாரும் செய்து கொண்ட உடன்படிக்கையைக் கண்டிப்பதாகவும், தங்களுடைய நிலங்களுக்குப் பதிலாகக் கொடுக்கப்படும் நஷ்ட ஈட்டுத் தொகையைப் பெறுவதில்லை யென்றும் நவம்பர் மாதம் முதல் வாரத்துக் கடைசிதினமுதல் சத்தியாக்கிரக யுத்தம் தொடங்குவ தென்றும் தீர்மானித்தார்கள். முல்ஷி பேட்டை வாசிகளுடைய உறுதியை இவ்வளவு உயர்ந்த நிலைக்குக் கொண்டுவிட்ட தாதா கம்பெனியாருக்காகவும் அரசாங்கத்தாருக்காகவும் இரங்குகின்றோம். முல்ஷிபேட்டை வாசிகளின் சத்தியப்போரில் நமது அநுதாபம் நிறைந்திருக்கிறது.

### மறுபடியும் லார்ட் சேம்ஸ்பார்ட்.

இந்தியாவில் தாம் ஆட்சிசெய்த விநோதங்களை லார்ட் சேம்ஸ்பார்ட் இங்கிலாந்து வாசிகளுக்கு எடுத்துச்சொல்லிக் களைத்துப்போயிருக்கிறார் என்று தெரிகிறது. சமீபத்தில் இவர் செய்த ஓர் உபந்நியாசத்தில், இந்தியக் கிளர்ச்சிக்காரர்களின் முறையே இப்பொழுது மாறியிருக்கிறதென்றும் ஐரிஷ் கிளர்ச்சிக்காரர்கள், இங்கிலீஷ் கிளர்ச்சிக்காரர்கள் இவர்களைப்பார்த்து இந்தியக் கிளர்ச்சிக் காரர்களும் கிளர்ச்சி செய்யும் விதத்தை நன்கு கற்றுக்கொண் டிருக்கிறார்களென்றும் கூறினர். இந்த அரிய உண்மையை வெளியிட்ட லார்ட் சேம்ஸ்பர்ட்டுக்கு நமது மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறோம். இங்கிலீஷ் கிளர்ச்சிக்காரர்களிடமிருந்து இந்தியர்கள் கற்றுக் கொண்டார்கள் என்று செம்ஸ்பர்ட் பிரபு கூறினர். அந்த இங்கிலீஷ் கிளர்ச்சிக்காரருள் லார்ட் செம்ஸ்பர்டும் ஒருவர் தானே!

### யார் சக்தி குறைந்து விட்டது?

எந்தக் கூட்டத்தில் மேலே கூறப்பட்ட உபந்நியாசத்தை லார்ட் செம்ஸ்பர்ட் செய்தாரோ, அதே கூட்டத்தில் லார்ட் செல்போர்னும் ஒரு பிரசங்கம் செய்தார். அப்பொழுது தென்னாப்பிரிக்காவில், தாம் இராஜப் பிரதிநிதியாயிருந்த போது காந்தியடிகளைப் பற்றிக் கவனிக்க நேரிட்டதென்றும் அவரோடு பழகுவது மிகவும் கஷ்டமாயிருந்த தென்றும் ஆனால்இப்பொழுது அவர் சக்தியில் மிகவும் குறைந்திருக்கிறார் என்றும் கூறினர். சக்தி எனின் எந்த சக்தி? தேக சக்தியில் குறைந்திருக்கிறார் என்பதை நாம் ஒத்துக் கொள்கிறோம். ஆன்ம சக்தியில்—? ஆன்ம சக்தி அவருக்குக் குறைந்திருந்தால் உலகத்தினர் அஞ்சும் வண்ணம் இந்த ஒத்துழையா இயக்கத்தை ஏன் ஆரம்பித்திருக்கிறார்? இதனால் யார் சக்தி குறைந்திருக்கிறது என்பது நன்கு புலப்படும்.

### இன்னும் மயக்கம்.

இந்தியச் சட்டசபை அங்கத்தினரான ஸ்ரீமான் தி. வி. சேஷகிரி ஐயர் இன்னும் இரட்டை ஆட்சியில் மோகங்கொண்டிருப்பது பற்றி நாம் பெரிதும் வருந்துகிறோம். இந்தியா அரசாங்கத்திலும் இந்தஇரட்டை ஆட்சி முறையை ஏற்படுத்தவேண்டு மென்றும், அப்படி ஏற்பட்டால் இந்தியச் சட்டசபையின் பொருட்டுப் புதிய தொகு எலக்ஷன் நடைபெறவேண்டு மென்றும் இவர் 'ஊழியன்' பத்திரிகைக்கு ஒரு வியாசம் எழுதியிருக்கிறார். மகாகாணங்களில் இரட்டை ஆட்சி ஏற்பட்டு என்ன நன்மை உண்டாகிவிட்ட தென்பது நமக்கு நன்கு விளங்கவில்லை. இந்தியா அரசாங்கத்தில் இந்தமுறையை ஏற்படுத்தினால் இன்னும் அதிக செலவேயன்றி நன்மையொன்றும் ஏற்படப்போவதில்லை. இந்திய அரசாங்கத்தில் இப்பொழுது மூன்று அங்கத்தினர்கள் இருப்பதால் என்ன பெரியநன்மை ஏற்பட்டு விட்டது? இரட்டை ஆட்சிமுறை ஏற்பட்டுவிட்டால் என்ன புதிய நன்மை உண்டாகப்போகிறது? இந்தியாவுக்கு முழுச்சுய ஆட்சி தவிர வேறொன்றும் வேண்டுவதில்லை.

### லார்ட் ரேடிங்கின் தீர்மானம்.

எவரும் தம்முடைய காரியங்களில் தலையிடக் கூடாதென்ற ஒரு நிபந்தனையுடனேயே லார்ட் ரேடிங் இந்திய இராஜப்பிரதிநிதி பதவியை ஏற்றுக்கொண்டார் என்று சொல்லப்படுகிறது. இவரும் தம்முடைய உபந்நியாசங்களில் நீதியைக் கைக்கொண்டு ஆளப்போவதாகச் சொல்லிவருகிறார். இவருடைய புதிய 'நீதி' முறையினால் இந்தியாவின் அரசியல் நிலைமையில் மூன்று வித மாற்றங்கள் ஏற்படும் என்று கூறப்படுகின்றது. முதலாவது ஒத்துழையா இயக்கம் கொடுமைச் செயல்களில் இறங்காதவரை அடக்கு முறைச் சட்டங்களை அரசாங்கத்தார் அநுசரிக்க மாட்டார்என்பது; இரண்டாவதாகரௌலட்சட்டம் அச்சுச் சட்டம் முதலிய அடக்கு முறைச் சட்டங்களைச் சட்ட புத்தகத்தினின்றும் எடுத்து விடப்போகின்றனர் என்பது; மூன்றாவதாக அரசாங்க நிருவாகத்தில் இந்தியர்களுக்கு இன்னும் அதிக உரிமை உண்டாகும் வண்ணம் மாண்டேகு செம்ஸ்பர்ட் சட்டத்தில் இன்னும் சில மாற்றங்கள் செய்யப் போகின்றனர் என்பது. இம்மூன்று நோக்கங்களும்நிறைவேற்றப்பட்டால் அதனால் இந்தியர் திருப்தி அடைந்துவிடுவர் என்பது அறியாமையே யாகும். இவைகள் பூரண சுய ஆட்சிக்கு அடிப்படைகளாமோ?

### காங்கிரஸின்மீதும் போர்.

இந்திய தேசீய மகாநாட்டை இதுகாறும் எந்த அதிகாரியும் இராஜத்துரோகக் கூட்டம் என்று கூறினதாகத் தெரியவில்லை. ஆனால் புதிய 'நீதி' ஆட்சியில், மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகள் மீதும் அதிகாரிகள் போர் தொடுத்து வருகிறார்கள். முன்னர் லாகூர் காங்கிரஸ் கமிட்டியின் கூட்டம் தடுக்கப்பட்டதென்பதை நேயர்கள் அறிவார்கள். இப்பொழுது ஜல்லந்தர் ஜில்லாவைச்சேர்ந்த ஷாகோட் காங்கிரஸ் கமிட்டியின் கூட்டம் இராஜத்துரோகத்தைப் பரப்புவது என்ற காரணத்தைக் கொண்டு ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டினால் தடுக்கப்பட்டிருக்கிறது. காங்கிரஸ் மஹா சபைக்கு இதுவரை எத்தகையதும் மரியாதையே கொடுத்து வந்தார். இப்பொழுது—? இதுவே 'நீதியை' அடிப்படையாகக் கொண்டுள்ள ஆட்சி முறை!



### நப்போலியன் சங்கம்.

சென்ற மாதம் ஐந்தாந் தேதி நப்போலியனின் முதல் நூற்றாண்டு தினம் எங்கனும் கொண்டாடப்பட்டது. அப்பொழுது லண்டனில் நப்போலியன் சங்கம் என்ற ஒரு சங்கம் ஏற்படுத்தப்பட்டது. நப்போலியனுடைய ஜீவிய சரித்திரத்தைப்பற்றிப் புதிய ஆராய்ச்சிகள் செய்வதும், நப்போலியனின் வீரத்தைப் பற்றி உலகெங்கும் பிரசாரம் செய்வதும் இச்சங்கத்தின் முக்கிய நோக்கங்களாகும். தமிழ் நாட்டில் கம்பர் சங்கம், திருவள்ளுவர் சங்கம் போன்ற சங்கங்கள் ஏற்படுவது எப்பொழுது?

### காந்தியடிகளின் விஜயம்.

காந்தியடிகள் தென்னாட்டிற்கு விஜயஞ் செய்வது பன்முறை தடைபட்டது. கடைசியில் ஜூலை மாதம் மூன்றாந் தேதி சென்னைக்கு விஜயம் செய்து சுமார் இருபது நாட்கள் இம்மாகாணத்தில் சுற்றுப்பிரயாணம் செய்வாரென்று அறிகிறோம். தென்னாட்டிற்கு ஒரு வேண்டுகோள் என்ற மகுடமிட்டு எழுதியுள்ள உபதலையங்கத்தில் கண்டபடி தமிழ்நாட்டார் காந்தியடிகளின் விஜயத்தைச் சிறப்பிப்பதுமன்றி திலகர் சுயராஜ்ய நிதிக்குப் போதிய பொருளுதவியும் செய்வார் என்று நம்புகின்றோம்.

### சென்னைமாகாண மகாநாடு.

இம்மகாநாடு கடைசியில் தஞ்சையில் இம்மாதம் 23, 24-ந் தேதிகளில் கூடும் என்று தெரிகிறது. இம்மகாநாடு செவ்வனேநடைபெறவேண்டு மென்று நாம் விரும்புகிறோம். காரணமின்றி இங்ஙனம் நாம் கூறவில்லை, மகாநாடு கூட்டுவோருக்குள் பலவித அபிப்பிராய வேற்றுமைகள் இருப்பதாகத் தெரிகிறது. இந்தநிலைமையில் இத்தகைய பிளவுகள் நம் உள்ளத்தைப் புண்படுத்துகின்றன. மகாநாடு கூடுவதற்குள் இவ்வேற்றுமைகள் ஒழிந்துபோகும் என்று கருதுகிறோம். நாட்டின் நலமே பெரிதன்றிச் சுய நலம் பெரிதன்று என்பதை ஒவ்வொரு தேசபக்தருக்கும் அறிவுறுத்த விரும்புகிறோம்.

### பேசும் கடியாரம்.

நாகரிக வளர்ச்சியின் பயனாகப் புதிய இயந்திரங்கள் பல கண்டு பிடிக்கப்படுகின்றன. இப்பொழுது அமெரிக்காவிலுள்ள சாஸ்திர நிபுணர் ஒருவர் பேசுங் கடியாரமொன்றைக் கண்டு பிடித்திருக்கிறார். கடியாரங்களில் இப்பொழுது இரண்டரை நாழிகைக்கு ஒரு முறை மணி அடிக்கிறது. இந்தப் புதிய கடியாரத்தின் படி காலை ஆறு மணிக்கு "மணி ஆறு, படுக்கையினின்றும் எழுந்திரு" என்று ஒரு சப்தம் உண்டாகிறது. மறுபடியும் காலை எட்டரை மணிக்கு "மணி எட்டரை, காலைப்போஜனம் செய்" என்று ஒரு தொனி எழுகிறது. இங்ஙனம் குறித்த நேரங்களில் மனிதன் செய்ய வேண்டிய காரியங்களையும் இக்கடியாரம் குறிப்பிக்கிறது. இதேமாதிரி, இத்தாலியாலிலுள்ள சாஸ்திர நிபுணர் ஒருவர், ஒரு வீட்டின் நுழைவாயிலில் ஒரு சிறு புகைப்படமெடுக்கும் கருவியைவைத்துவிட்டு, அவ்வீட்டுக்குள் நுழைவோர் அனைவருடைய உருவத்தையும் தெரிந்துகொள்ளும்படி செய்தனராம். இத்தகைய புதியகருவிகள், ஒரு துறையாகப் பார்க்கப்போனால், மனிதனுடைய இயற்கைச் சக்தியைக் குறைத்து விடுகின்றனவென்று சில அறிஞர் அபிப்பிராயப்படுவர். ஆனால் கொல்லும் கருவிகள் புதிதாகக்கண்டுபிடிக்கப்படுவதைக் காட்டிலும் இதுபோன்ற கருவிகள் கண்டு பிடிக்கப்படுவது சிறந்ததேயாகும்.

### ஸ்ரீமான் யாகுப் ஹஸன்.

மலபார் ஜில்லாவில் இன்னும் சமாதானம் ஏற்படவில்லையா என்று ஸ்ரீமான் தாமஸை நாம் கேட்க விரும்புகிறோம். ஸ்ரீமான் யாகுப் ஹாஸனைச் சிறையிலிட்டு சுமார் நான்குமாத காலமாகின்றது. அவருக்கு விதிக்கப்பட்ட ஆறுமாதத் தண்டனையையும் அவர் அநுபவிப்பார் என்று முதலில் சொல்லப்படவில்லை. மலபாரில் கூடியவிரைவில்சமாதானம்ஏற்பட்டுவிட்டால் அவரைவிடுதலைசெய்து விடுவதாகவே அப்பொழுது கூறப்பட்டது. இப்பொழுது ஸ்ரீமான் யாகுப் ஹாஸனைக் கோயமுத்தூர் சிறையில் வைத்திருப்பதன் நோக்க மென்ன? மலபாரில் வைத்திருப்பது அநாவசிய மென்று அரசாங்கத்தாருக்குத் தோன்றினால், அவரை, கோயமுத்தூரிலிருந்து ஏன் விடுதலை செய்யக்கூடாது? ஒத்துழையாதாரின் பொறுமையை அரசாங்கத்தார் அளந்து பார்க்கின்றனர் போலும்!

## அடக்கு முறை.

### ஒரு தேசபக்தரின் வீரமொழிகள்.

மத்தியமாணத்தைச் சேர்ந்த மாருதி ராவ் போயோர்க்கார் என்பவர் கிரிமனல் புரசீஜர் கோட் 108-வது செக்ஷன்படி குற்றம் சாட்டப்பட்டு கோர்ட்டுக்கு விசாரணைக்குக் கொண்டுவரப் பட்டார். அப்போது அவர் பின் வருவனவற்றை கோர்ட்டாருக்கு எழுத்து மூலமாய் எழுதிக்கொடுத்தார்.

"இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் இருந்த விரோதத்தைப் பற்றியாவது இராஜத்துரோகத்தைப் பற்றியாவது நான் அறிந்துகொள்ளக் கவலைப்படவேயில்லை. என்னுடைய தேசத்தினர் அநுபவிக்கும் கஷ்டங்களையே நான் எடுத்துக் கூறினேன். இதைக்கேட்டு கிராமவாசிகள் துவேஷமும் வெறுப்பும் கொள்ளும் பட்சத்தில் அத்தகைய உணர்ச்சியை யுண்டாக்கக்கூடிய ஆட்சிமுறை திருத்தப்பட்டு இந்தியாவில் சுயராஜ்யம் ஏற்படவேண்டும். ஒத்துழையாமையை அழிக்கும் நோக்கத்துடன் அரசாங்கத்தார் தங்கள் ஊழியர்கள் செய்யும் அட்டூழியங்களை ஆதரித்து வருவதே இப்படி கைது செய்யப்படுவதற்கெல்லாம் காரணமாகும். அரசாங்கத்தார் இராணுவ ஆட்சிமுறையை நடத்த இஷ்டங்கொண்டுள்ளவராகையால் அன்னார் எக்காரியத்தையும் செய்யத் தயாரா யிருக்கின்றனர். என்னுடைய உபந்யாசங்களைத் தப்பாக எடுத்திருக்கின்றனர். அதில் உண்மையல்லாத விஷயங்களையும் கலந்திருக்கின்றனர். நான் அவைகளை யெல்லாம் பொருட்படுத்தவில்லை. இவ்வழக்கு ஒரு வேடிக்கையா யிருக்கிறபடியால் அதைப்பற்றியும் பொருட்படுத்தவில்லை. ஒவ்வொரு இந்தியனும் அரசாங்கத்தின்மீதும் ஆளும் ஜாதியாரின் மீதும் அவர்கள் செய்யும் கொடுமையான முறைகளைக் கொண்டு துவேஷங் கொண்டிருக்க, துவேஷத்தைப் பிறர் உண்டாக்கியிருக்கிறார்களென்பதற்கு அர்த்தமில்லை. ஜெனரல் டையரைப்போன்ற அரசாங்க உத்தியோகஸ்தர்களும் இவர்கள்போன்றார்க்கு உதவியாயிருக்கும் ஆங்கிலேயர்களும்தான் இந்தியாவில் துவேஷம் ஏற்பட்டதற்குக் காரணர்கள். ஜனங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் கோபத்தை ஒத்துழையாக்காரர்கள் அடக்கிவைத்திருக்கிறார்கள். இப்போது அரசாங்கத்தாருக்கும் ஒத்துழையாக்காரர்களுக்கும் சச்சரவு ஏற்பட்டிருக்கிறது. இச்சச்சரவை அரசாங்கத்தார் பட்சபாதமில்லாத உலகக் கோர்ட்டுக்குக் கொண்டு போவார்களேயானால், எனது நாட்டினரைத் துன்புறுத்தியதற்காகத் தங்கள் முகத்தை மூடிக்கொள்ள நேரிடும். அரசாங்கத்தார் தங்கள் ஊழியர் ஒருவர் மூலமாய் யாரோ குற்றஞ் செய்ததாகச் சொல்லப்படுவதற்காக மற்ற ஊழியர்கள் முன் என் நாட்டினரை விசாரணை செய்து கைதுசெய்யும் வழக்கத்தை மேற்கொண்டுள்ளார்கள். இத்தகைய கோர்ட்டுகளுக்கு என் வழக்கை விசாரிக்கும் அதிகாரம் இல்லை. நான் என் தர்மப்படி நடந்தேன். நான் என் தாய்நாட்டிற்கு உழைக்கவேண்டிய கடமையைச் செய்துவிட்டேன். என்னைப் பேசவொட்டாமல் தடுத்தாலும் அல்லது என்னிடமிருந்து ஜாமீன் வாங்கினாலும் தாய்நாடு சுதந்தரமடைவதற்காகச் செய்யப்படும் வேலை ஒருபோதும் நிற்காது. கோர்ட்டார் தங்களிஷ்டப்படி செய்யலாம்."

விசாரணை செய்த மாஜிஸ்ட்ரேட் மேற்கூறிய நபர் ஒருவருடம்வரை நன்னடக்கையுடன் இருப்பதற்காக ஜாமீன் கொடுக்க வேண்டுமென்று கட்டளையிட்டார். அப்படியே அன்னார் ஜாமீன் எழுதிக் கொடுத்தார்.

### மாணவரின்மீது அடக்குமுறை.

ஸ்ரீமான் மாணிக்க கோபால மேனன் என்பவர் ஒத்துழையாமையை முன்னிட்டு கல்விச்சாலை பகிஷ்காரஞ் செய்தார். அவர் பொன்னானியில் தேசீயப் பிரசார வேலை செய்துவருகிறார். மாணவர்கள் மகாநாட்டின் போது இம்மாணவர் இராஜநிந்தனையான உபந்யாச மொன்றை ஓட்டப் பாலையத்தில் செய்தாரென்று இவர் குற்றஞ் சாட்டப்பட் டிருக்கிறார். இவர்மீது இனிமேல் வழக்கு தொடுக்கப்படும்.

### பிரிட்டிஷ் கொச்சியில் அடக்குமுறை.

ஜூன் 9-ந்தேதியில் பிரிட்டிஷ் கொச்சி ஒத்துழையாக் கூட்டமும், கிலாபத் கூட்டமும் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இக்கூட்டம் நடைபெறுவதனால் அமைதியின்மை ஏற்படுமென்று கருதி அரசாங்கத்தார் கூட்டம் நடைபெறாவண்ணம் தடுத்துவிட்டனர்.

### அலகாபாத்தில் அடக்குமுறை.

பூதானைச்சேர்ந்த அப்துஸ் சாமத் என்பவர் இராஜநிந்தனையான உபந்யாசங்கள் செய்தாரென்று குற்றஞ் சாட்டப்பட்டு ஹார்தோய் மாஜிஸ்ட்ரேட்டால் இரண்டு வருடக் கடுங்காவல் தண்டனைக்கு உட்படுத்தப் பட்டார். இவர் தாம் செய்தது தப்பு என்று ஒப்புக் கொண்டதன்மேல் கவர்னர் தண்டனையை ரத்து செய்து விட்டார்.

### அறிஞர் கித்வானி.

அறிஞர் கித்வானியும் குஜராத் வித்தியா பீடத்தைச்சேர்ந்த ஆசாரியா என்ற இருவரும் பெஜவாடாவில் செய்த உபந்யாசங்களுக்காகக் கைது செய்யப்பட் டிருக்கிறார்கள். இவர்கள் சிந்து மாகாணத்திலுள்ள ஐதராபாத்துக்கு 11-ந் தேதியில் கொண்டுவரப்பட்டார்கள்.

### சந்தாசிங்.

லைசன்ஸ் இல்லாமல் துப்பாக்கியொன்றை வைத்துக் கொண்டிருந்த தற்காக ஜீலத்தைச் சேர்ந்த சந்தாசிங் என்னும் சீக்கியர் லாகூர் ரெயில்வே ஸ்டேஷனில் மேமாதம் முதல்தேதியில் கைதுசெய்யப் பட்டார். சந்தாசிங்கின் வழக்கு இம்மாதம் 13-ந் தேதி ஆரம்பிக்கப்பட்டது. சந்தாசிங்குடன் ஒன்பதுபேர் வந்தனர். இவர்கள் கையில் கத்திகளைக் கொண்டு வந்தார்கள். இவர்களில் மூவர் சண்டையில் உபயோகிக்கப்படும் கோடாரியைக் கையில் கொண்டு வந்திருந்தார்கள். இவர்களை மாஜிஸ்ட்ரேட் கைது செய்து, தாய் தகப்பன் பெயர், இருப்பிடம் இவைகளைச் சொல்ல வேண்டுமென்று கேட்க, இவர்கள் மறுத்து விட்டார்கள்.

### லாகூரில் காங்கிரஸ் கமிட்டி.

#### தடுக்கப்பட்ட கூட்டம்.

சென்ற வாரத்தில் லாகூர் காங்கிரஸ் கமிட்டியின் கூட்டமொன்று நடைபெற வேண்டியதா யிருந்தது. அதிகாரிகள் அமைதியின்மை ஏற்படுமென்று கருதி கூட்டம் நடைபெறக் கூடாதென்று கட்டளை யிட்டனர். இதைப்பற்றி லாகூர் காங்கிரஸ் கமிட்டித்தலைவரான பண்டித ராம் பூஜிதத்தார் சௌத்திரி, ஸ்ரீமான்களான விஜயராகவாச்சாரியாருக்கும் பண்டித மோதிலால் நேருவுக்கும் மகாத்மா காந்திக்கும் தெரியப்படுத்தி யிருக்கின்றனர். மறுபடியும் கமிட்டியின் கூட்ட மொன்றைக் கூட்டி அதிகாரிகளின் மனப்பான்மையை அறிவார்கள்.

### சுவாமி சத்தியதேவர்.

சுவாமி சத்யதேவர் பொதுக்கூட்டங்களில் பேசக்கூடாதென்று 144-வது செக்ஷன்படி தடுக்கப்பட்டிருந்தும் அன்னார் அக்கட்டளையை மீறி பாருக்ஹா பாத்திலுள்ள திலகபவன் எனுமிடத்தில் "மிருகத்தனமல்லாத செயலின் மேன்மை" என்பதைப்பற்றி அரியதோர் உபந்யாசம்செய்தார். கட்டளையைமீறி நடந்ததற்காக இவர் இந்தியன் பினல்கோட் 188-வது செக்ஷன்படி விசாரிக்கப்பட்டார் தாம் கட்டளையைமீறி நடந்தது உண்மையென்று சுவாமி ஒத்துக்கொண்டார். தீர்ப்பு 17-ந் தேதியன்று சொல்லப்படும்.

### ஒரு கூட்டம் தடுக்கப்பட்டது.

கொல்லங் கோடைச் சேர்ந்த வடவனூரில் 12-ந் தேதி யன்று கிலாபத் கூட்டம் நடைபெறுவதற்குரிய ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சப் டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட்டின் கட்டளைக் கிணங்க அக்கூட்டம் நடைபெறா வண்ணம் தடுக்கப்பட்டது.

### துண்டுப் பிரசுரத்தின் பறிமுதல்.

மௌலானா மகமதலி சென்னையில் எப்ரல் 2-ந் தேதி செய்த ஆங்கிலப் பிரசங்கத்தை மலையாளத்தில் மொழி பெயர்த்து திருச்சூரில் அச்சிடப்பட்டுள்ள துண்டுப் பிரசுரங்களும் அதே விஷயத்தைப்பற்றி மற்ற பாஷைகளில் வெளிவந்த துண்டுப் பிரசுரங்களும் பறிமுதல் செய்யப்படவேண்டுமென்று சென்னை அரசாங்கத்தார் கட்டளையிட்டுள்ளார்.

### நரஞ்சன் பிரசாதர்.

நரஞ்சன்பிரசாதர் என்பவருக்கு 4 வருடக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டதென்று வடமதுரைச் செய்தி ஒன்று கூறுகிறது.

### அச்சுச்சட்டம்.

டில்லியில் பிரசுரமாகும் பதே என்ற உருதுபாஷைப் பத்திரிகை ஆயிரம் ரூபா ஜாமீன் கட்டவேண்டுமென்று கேட்கப்பட்டுள்ளது.

## அங்கோரா விஷயம்.

### மௌலானா அப்துல் பாரியின் அபிப்பிராயம்.

மௌலானா அப்துல் பாரி முஸல்மான்களின் பிரதிநிதி என்ற முறையில் அங்கோரா விஷயத்தைப்பற்றிப் பின்வரும் அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்:—

நாங்கள் ஜெயிலுக்குப் போவதற்குப் பயந்து ஒத்துழையா இயக்கத்தை ஆதரிக்கவில்லை. ஒத்துழையா இயக்கத்தில் எங்கள் குறைகள் நிவர்த்தியாகுமென்ற கருத்துடன் நாங்கள் அவ்வியக்கத்தை ஆதரித்தோம். நாங்கள் காந்தியிடம் கூறியது வருமாறு:—"நாங்கள் தங்களுடன் கூடியிருக்கும் வரை மிருகத்தனமல்லாத ஒத்துழையாமையை மேற்கொண் டிருப்போம். அடக்குமுறைகள் வலுப்பதனால் நாங்களும் எங்கள் கொள்கையில் மாறுதல் செய்யவேண்டியதா யிருக்கிறது. அங்கோரா அரசாங்கத்தாருடன் பிரிட்டிஷார் யுத்தத்திற்குப் போவது இந்திய முஸ்லிம்களின் மனதைப் புண்படுத்துவதாகும். அங்கோராவுக்கு இடையூறு நேர்ந்தால் இந்திய முஸ்லீம்கள் சும்மா இருக்க மாட்டார்கள் என்பதை யுன்னி பிரிட்டிஷார் தக்க விதமாய்க் காரியங்களை நடத்தவேண்டும். தற்போது அங்கோரா இராஜ்யமே முஸ்லிம் இராஜ்யங்களுக்குள் சுதந்தரம் பெற்றிருக்கும் நாடாகும். இங்கிலாந்து மெசபடோமியாவிலுள்ள படைகளைத் திரும்ப அழைத்துக்கொள்ள வேண்டும். அனடோலியா ஐரோப்பிய துருக்கி விஷயமாக இங்கிலாந்து நடுநிலைமையுட னிருக்கவேண்டும். இல்லாவிட்டால் முஸ்லிம்கள் இங்கிலாந்துடன் சச்சரவு செய்ய நேரிடும்.

### அலி சகோதரர்கள் அறிக்கை.

ஹக்கீம் அஜ்மல்கான், டாக்டர் எம். ஏ. அன்சாரி என்ற இரு முஸ்லிம் கனவான்கள் அலி சகோதரர்கள் வெளியிட்டுள்ள அறிக்கையைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்கள்.

"அலிசகோதரர்கள் தாங்கள் பிரயோகித்த சில வசனங்கள் கடுமையாயிருக்கின்றனவென்று சில நண்பர்கள் கூறியதற்கிணங்க அவர்கள் அவ்வசனங்களைப் பிரயோகித்ததற்காக வருத்தமெய்துவதாகக் கூறி அவ்வசனங்களைப் பிரயோகித்ததற்காக நண்பர்கள் தங்களை மன்னிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்கள். இவ்விஷயத்தைப் பற்றிச் சில தேசீயவாதிகள் உள்பட பலர் பல விதமாய்ப் பேசிக் கொள்கிறார்கள். ஒத்துழையாதாரின்நோக்கம், கருத்தும்என்னஎன்பதைத் தெளிவாக மகாத்மா காந்தி இராஜப்பிரதிநிதிக்கு எடுத்துரைத்தார். அலி சகோதரர்கள் அரசாங்கத்தார் தங்களை சிறைச்சாலையில் வைத்து விடுவார்களென்று பயந்து அவ்வறிக்கையை வெளியிடவில்லை. அவர்கள் தங்கள் தேசத்தின் நன்மையைக் கருதியும் நாட்டினரின் க்ஷேமத்தைக் கருதியும் தான் அவ்வறிக்கையை வெளியிட்டார்கள்."

### ஸ்ரீமான் குப்தா விடுதலை செய்யப்பட்டார்.

ஸ்ரீமான் பாலசுப்ரமணிய குப்தா என்பவர் மீது, கி. பு. கோ 108-வது செக்ஷன்படி உத்தரவு பிறப்பிக்கப்பட்டு ஆறு மாதத்திற்குத் தண்டிக்கப்பட்டார். ஜூன் 9-ந் தேதியில் அன்னார் தண்டனையினின்று விடுவிக்கப்பட்டார்.

### ஸ்ரீ அருணகிரி நாதர் குருபூசை.

ஸ்ரீமத் அருணகிரி நாதரின் குருபூசை மகா தேஜோ மண்டலத்தாரால் 19-6-21 ஞாயிற்றுக்கிழமைசென்னைப்புதுப்பாக்கம் பைகிராப்ட்ஸ் ரோட், சிவசுப்ரமணிய பக்தஜன சபையில் மேற்படி யாருக்குக் குருபூசை கொண்டாடப்படுமாகையால் அன்பர்கள் அனைவரும் விஜயம் செய்யும் படிக்குக் கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

### கள்ளிக்கோட்டை நகரபரிபாலன சபை.

கள்ளிக்கோட்டை நகரபரிபாலன சபையார், மகாத்மா காந்தி கள்ளிக் கோட்டைக்கு விஜயம் செய்யும்போது அவருக்கு உபசாரப்பத்திர மொன்றை வாசித்துக் கொடுக்கவேண்டு மென்று தீர்மானித்தார்கள்.

### துருக்கி விஷயம்.

#### ஒருவித முடிவும் ஏற்படவில்லை.

பிரதம மந்திரியார் தேக அசௌகரியம் காரணமாக அங்கோரா விஷயம் கவனிக்கப்படுவது நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறதென்று லண்டனிலிருந்து வந்த செய்தி ஒன்று கூறுகின்றது.

## மதிப்புரை.

### ஸ்ரீ கேஸரி சுகாநந்தனி.

இப்பெயர் வாய்ந்த தைலம் எமது பார்வைக்கு வந்தது. இது ஸ்நானத்துக்கு உபயோகப்படுவது. மூளை வெம்மையைப் போக்குந் தன்மை இதன் பாலுளது. இத்தைலம் கோடைகால ஸ்நானத்துக்கு வேண்டற்பால தென்பதை அனுபவத்திற் காணலாம். விலை முதலியவற்றை விளம்பரத்திற் காண்க.

### சதானந்த சர்வரோக நிவாரணி.

பல நோய்களைக் குணப்படுத்தும் இம்மருந்து எமது பார்வைக்கு வந்தது. நமது உத்தியோக சாலையிலுள்ள பலர் பலவித நோய்களுக்கு இம்மருந்தைக் குறிப்பிட்ட அநுபானத்தோடு உண்டனர். விளம்பரத்தில் கூறப்பட்டுள்ள பல நோய்கள் தீர்கின்றன. அநுபான முறைகள் பெரிதும் போற்றத்தக்கன. விலை முதலியவற்றை விளம்பரத்திற்காண்க.

### ஸ்ரீமான் சி. ரா. ரெட்டி.

மைசூர் கல்வி இலாகா தலைவரான ஸ்ரீமான் ஸி. ரா. ரெட்டி தம் பதவியை சீக்கிரத்தில் இராஜிநாமா செய்வாரென்று "ஜஸ்டிஸ்" பத்திரிகை அறிகிறது.

### ஆகாயவிமான யாத்திரை.

#### ஆறுநாட்களில் இந்தியா வந்து சேரலாம்.

டெயிலி நியூஸ் என்ற பத்திரிகையில் மேஜர் டப்ளியூ. டி. பிளேக் என்பவர் ஆர். 36 என்ற எண்ணுள்ள ஆகாய விமானம் 6 தினங்களில் இங்கிலாந்திலிருந்து இந்தியா வந்து சேருமென்று கூறுகின்றார். அவ்வாகாய விமானத்தின் அகலம் 672 அடி ஆகும். அது, 64 டன் நிறையுள்ள சாமான்களைத் தூக்கிச் செல்லும்; மணி ஒன்றுக்கு 65மைல் வீதம் பறக்கும். இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வருவதற்கு முதல்வகுப்புக்கட்டணம் 120பவுன் ஆகும்.

### இராஜ மகேந்திரபுரம் நகரபரிபாலன சபை.

#### ஒத்துழையாதார் தலைவராகத் தெரிந்தெடுக்கப் பட்டார்.

இராஜ மகேந்திரபுரம் நகரபரிபாலன சபைக்குத் தலைவரைத் தெரிந்தெடுப்பதற்கு அங்கத்தினர்களின் கூட்டமொன்று இம்மாதம் 10-ந்தேதியில் நடைபெற்றது. இருவர் அங்கத்தினர்களாய் நின்றார்கள். அவர்களில் ஒருவர் ஒத்துழையாதார். ஒத்துழையாதாருக்கே அதிகமான ஓட்டுகள் கிடைத்தமையால் அன்னாரே சபையின் தலைவராகத் தெரிந்தெடுக்கப் பட்டார். அன்னார் கோதாவரித் தலைவர்கள் வழக்கில் சம்பந்தப்பட்டவர்.

### திருப்பதி.

திருப்பதியில் இரு உபந்யாசங்கள் செய்யப்பட்டதன் பலனாக, (9-6-21.) குத்பாவின் போது சில முஸ்லிம் வாலிபர்கள் தேசீயச் சின்னந் தரித்துக் கொண்டு குத்பா பள்ளியிலும், புதிய மஸ்ஜிதிலும் உண்டிகளையெடுத்துக் கொண்டு, அநாதைக் கஷ்ட நிவர்த்திக்குப் பணம் சேர்த்தார்கள்.





# பாணபுரத்து வீரன்

## தேசபக்தி நிறைந்த நாடகம்

ஒரு 'நாடகாசிரியன்' எழுதியது

### முதல் அங்கம்.

#### இரண்டாங் களம்.

இடம்: பாணபுரம்.

காலம்: காலை.

[புரேசனும் நாகநாதனும் பேசிக்கொண்டிருக்கின்றனர்.]

புரேசன்: நண்பனே! உண்மையில் கூறுகிறேன். என் நாட்டின் நிலையை நினைக்கின்—இதோ என் உள்ளத்தைத் தொட்டுப் பார். என் உணர்ச்சியை வாயால் அளந்து கூற முடியவில்லை.

நாகநாதன்: உண்மை. எத்தகைய இழிஞனுக்கும் நாட்டுணர்ச்சி இருக்கும். வாலீசனிடத்தில் பழகி அவனால் பெரிதும் பாராட்டப்பட்டு வந்த உனக்குத் தேசஉணர்ச்சி இராமலிருக்குமோ? ஆயினும் சிறிது அமைதியுடனும் பொறுமையுடனும் இருக்கவேண்டுமென்றே நான் கேட்டுக்கொள்கிறேன்.

புரே: ஆனால் நான் கலகம் விளைவித்து நாட்டில் குழப்பம் உண்டாக்க வேண்டுமென்று கூறுகின்றேனே? ஒருகாலுமில்லை. கலகச் சூழ்ச்சியினாலும், குழப்பப் பெருக்கத்தாலும் நம் நாடு முன்னேற்றமடையாது; எந்த நாடும் முன்னேற்றமடைந்ததாகச் சரித்திரங் கூறவில்லை. நியாயவரம்புக்குட்பட்ட காரியங்களை நாம் செய்துகொண்டுபோனால், ஈசன் நமக்குத் துணையாயிருப்பான் என்பது நிச்சயம். நான் கூறுவதெல்லாம் யாதெனில், நியாயத்திற்குக் கட்டுப்பட்டுள்ள சுதந்தரங்களை நாம் ஏன் அநுபவித்தல் கூடாதென்பதேயாம். அதிரத அரசரின் சிறு கருணையால் அளிக்கப்பட்டிருக்கும் இச்சிறிய சுதந்தரத்தை அநுபவிக்கவும் நம்மவரிற் சிலர் பின்னடைகின்றனர். அஃதேன் என்பதே என் கேள்வி.

நாக: அஃது அவரவருடைய மனத்தின் தன்மையைப் பொறுத்திருக்கலாம்.

புரே: மனமாவது? தன்மையாவது? அவர்களுக்கு மனமேயில்லையென்று நான் கூறுவேன். அவர்களை நான் மனமிலிகள், அறிவிலிகள் என்று அழைப்பேன்.

நாக: உன்னுடைய கோரிக்கைகளுக்கு அவர்கள் இணங்காம லிருத்தலினாலேயே அவர்கள் அறிவிலிகளோ? அங்ஙனம் கூறுவதைச் சிலர் சம்மதிக்கமாட்டார்.

புரே: ஏன்? யான் தவறாகக் கூறவில்லை. அவர்கள் — அவ்வறிவிலிகள்— நாட்டின் நலத்தை நாடவில்லை. நாட்டின் நன்மையை விரும்பாமற் போனபோதிலும், நாட்டைச் சத்துருக்களுக்குக்காட்டிக்கொடாமலிருந்தால்போதும். அதுவும் இல்லை. ஒன்றும் செய்யாமல் பேசாமலேனும் இருக்கிறார்களா? அதுவும் இல்லை. மேலும் செல்கிறார்கள்; கீழும் இறங்குகிறார்கள். அவர்களை நாம் என் செய்வது?

நாக: அவர்களை நாம் ஏன் கவனிக்க வேண்டும்?

புரே: கவனியாமல் விட்டுவிட்டால் நம் நாடு அதோகதிதான். அவர்கள் அதிரத அரசருக்கும் இச்சகமாகப் பேசுவார்கள். ஜனங்களிடத்தும் வந்து, உங்களுக்கு நன்மை செய்யவே நாங்கள் பிறந்திருக்கிறோம் என்று கூறுவார்கள். கடைசியில் அவர்களுடைய செய்கையை ஆராய்ந்து பார்ப்போமாயின் சுயநலமாகவே வந்து முடியும். நாம் இச்சிறு கூட்டத்தாரைக் கவனியாது விடுவோமாயின், ஜனங்கள் இவருடைய கூற்றை நம்பி மோசம் போவார்கள். ஆகையால்தான் இக்கூட்டத்தாரின் செல்வாக்கைக் குறைக்க வேண்டுமென்று நான் கூறுகிறேன்.

நாக: உன்னுடைய கோரிக்கைகளில் எனக்கு மிக்க அநுதாபமுண்டு. ஆனால் நீ இப்பொழுது எக்கூட்டத்தாரைப்பற்றிக் குறைகூறுகின்றனையோ அக்கூட்டத்தார் நம் நாட்டவரே என்பதையும் அதனால் அவர்கள் நம் சகோதரர்களே என்பதையும் நீ நன்குணர்தல் வேண்டும்.

புரே: அவர்கள் நம்மவர்களானது பற்றித்தான் நான் அவர்கள் பொருட்டு இரங்குகின்றேன். அவர்கள் நம் நாட்டிலேயே பிறந்து, நம் நாட்டிலேயே வளர்ந்து, நம் நாட்டிலேயே தம் வாழ்க்கைக்குரிய சாதனங்களைப் பெற்றுக்கொண்டு கடைசியில், நம் நாட்டின் நன்மையை விரும்பாம லிருக்கின்றார்கள். அதைக் குறித்தே நான் பெரிதும் விசனிக்கின்றேன். [பொறுத்து] நாகநாதா! நம்நாட்டின் தற்போழ்துள்ள நிலையை இப்பொழுது நீ அறிந்திருக்கின்றனையோ? அந்தோ! அதை யெடுத்துக் கூறவும் என் வாய் கூசுகின்றது. நண்பனே! நம் நாட்டுப் பூர்வ சரித்திரத்தை நீ படித்திருக்கின்றனையோ? அப்பொழுது நம் நாட்டில் கல்வி மகளும் செல்வமகளும் நெருங்கிய உறவுகொண்டு நாட்டியம் புரிந்து வந்தார்கள். அரசன் ஆணைக்கஞ்சி வருணன் தன் கருணை மாரியைப் பொழிந்துகொண்டிருந்தான். ஊர்வனவும், பறப்பனவும் நடப்பனவும் இன்புற்று வாழ்ந்து வந்தன. நம் பெரியோர் அறநெறிப்பட்டு, கடவுள் ஒருவர் இருக்கிறார் என்ற நம்பிக்கையுடன் தத்தமக்குரிய கடன்களைச் செவ்வனே நிறைவேற்றி வந்தனர். வியாபாரம் செழித்திருந்தது. கைத்தொழில் நித்தியம் போற்றப்பட்டுவந்தது. காமனை வென்ற காளையர் கடல்மீது கலஞ் செலுத்திப் பிறநாடுகளில் பண்டமாற்றல் செய்து வந்தார், பிறநாட்டரசர் நம் நாட்டு வேந்தரைப் போற்றி வந்தனர். அக்காலத்தில் பிச்சைக்காரரைக் காண்டல் அருமையாயிருந்தது. ஒரு புலவர், நம் நாட்டு வளப்பத்தைக் குறிக்குங் காலத்தில், இந்நாட்டில் வலிமையென் பதே மாந்தருக்கில்லை. இப்பெரும்பதி வாழ்வார் உலோபிகளாகவே இருக்கின்றார் என்பன போன்ற பிரயோகங்களை வேடிக்கையாக உபயோகிக்கின்றார். இப்பிரயோகங்களின் பொருளென்னை? இந்நாட்டிலுள்ளார்க்கு வலிமையே இல்லையென்றால் சத்துருவே கிடையாதென்றும், உலோபிகளல்லாதாரைக் காண்டல் அருமையெனின், தரித்திரரே இல்லையென்றும் பொருள் கூறுவர் புலவர். இவ்வளமே நம் நாட்டுப் பண்டைப் பெருமையை எத்தனை இரவுகள் வேண்மொனாலும் கூறிக்கொண்டு செல்வேன். இப்பொழுது நம்நாட்டின் நிலையைச் சிறிது யோசித்துப் பார். அதிரதருடைய ஆட்சியில் நம் நாடு மலினமடைந்து கொண்டே வருகிறது. நம் நாடு மிகச் சிறிய நாடு. இதில் எண்ணிறந்த நோய்கள் தலைவிரித்தாடுகின்றன. ஏழை மக்களின் தொகை பெருகிக்கொண்டு வருகிறது. நம் நாட்டை அண்டை நாட்டுப் படைகள் காத்துக்கொண்டிருக்கின்றன. பாணபுரத்துச் சேனை புதைந்து புல்லும் முளைத்துப் போயிற்று. நம் நாட்டு மக்களின் வீரம் அநாகரிக பலத்தால் குன்றப்பட்டுப் போய்விட்டது. நோயும், வறுமையும், கொடுமையும் அதிகரித்துப் போகவே, கலைமகளும் அவள் மாமியும் வேற்றுமைப்பட்டு வேற்று நாடுகளுக்கு ஓடிவிட்டனர். நமது வியாபாரத்துறை தூர்ந்து போயிற்று; கைத்தொழில் செத்தது. அண்டைநாட்டரசரின் ஆட்சியால் நாம் சொல்லொணாத் துன்பங்களை அநுபவித்து வருகின்றோம். இவைகளைக் கண்ட எந்தச் சண்டாளனுக்கும் பாணபுரத்தின்மீது இரக்கம் பிறக்கும். ஆனால் நம் நாட்டுச் சகோதரரிற் சிலர் இவைகளைப் பொருட்படுத்தாது தம் சுயநலத்தைக் கருதி வாளா காலங்கழிப்பதுமன்றி நம் தாய்நாட்டிற்குத் தீங்கு செய்யவும் துணிகிறார்கள்.

[புரேசனின் எதிர்க்கட்சியைச் சார்ந்த ஒரு கனவான் பிரவேசிக்கிறார்.]

கனவான்: யார்மீது அபிஷேகம் நடந்துகொண் டிருக்கிறது?

நாக: எல்லாம் உங்கள்மீது தான்.

கன: நாங்கள் தான் புரேசருடைய கையில் அகப்பட்டு விழிக்கின்றோம்.

புரே: என்னிடத்தில் அகப்பட்டுக் கொண்டு விழிப்பானேன்? அதிரதமஹா ராஜருடைய தயவு இருக்கும்போது நீங்கள் யாரிடத்தில் அகப்பட்டுக்கொண்டு விழிக்கவேண்டும்?

கன: புரேசரே! உங்களுடைய தேசபக்தியை நான் மெச்சுகிறேன். நீங்கள் தேச முன்னேற்றத்திற்காகப் பாடு படுவதை நான் பாராட்டுகிறேன். ஆனால் நீங்கள் வழங்கும் உரைகள் மாத்திரம் மிக்க கடுமையா யிருக்கின்றன. அதனையே நானும் என் சார்பாரும் வெறுக்கின்றோம்.

புரே: நீங்கள் எதைத்தான் வெறுக்கவில்லை. என்னை வெறுக்கிறீர்கள்; என் கூட்டத்தாரை வெறுக்கிறீர்கள்; என் பேச்சுக்களையும் செய்கைகளையும் வெறுக்கிறீர்கள். என் தாய்நாட்டை வெறுக்கிறீர்கள். அதிரத அரசரைத் தவிர உங்களால் வெறுக்கப்படாத வஸ்துவும் இவ்வுலகில் உண்டோ? உங்களால் வேண்டப்படுவது அரசருடையவும் அவரைச் சார்ந்தோருடையவும் தயவு. அஃது உங்களுக்குப் பூரணமாகக் கிடைத்து விட்டால், மற்றவைகளின்மீது உங்கள் கவனம் ஏன் செல்லவேண்டும்? ஐயா! நீங்கள்—நீங்கள் எனின் உங்களைக் குறித்து நான் கூறவில்லை; உங்கள் கூட்டத்தாரைப் பொதுவாகக் கூறுகிறேன்.—உத்தம தேசாபிமானிகளா யிருக்கலாம்; சீமான்களா யிருக்கலாம்; அறிஞர்களாக இருக்கலாம். ஆனால் நீங்கள் செய்யுந் தேசத்தொண்டு என்போலியரால் வெறுக்கப்படுகின்றன. நீங்கள் இத்தகைய தேசத்தொண்டு செய்யாமல், வாளாவிடப்பின், உங்கள் பாதங்களுக்கு மாத்திரமல்ல உங்கள் சந்ததியார் அனைவருக்கும் என் கூட்டத்தாரின் பொருட்டு நான் வந்தனஞ் செய்வேன்.

கன: புரேசரே! நீர் இளைஞர். இன்னும் அதிக அநுபவம் வேண்டும். தேசத்தின் நிலையையும், ஜனங்களின் தன்மையையும், அரசாட்சியின் அமைப்பையும் நீங்கள் இன்னும் நன்கு அறியவில்லை. நாங்கள் சென்ற ஐம்பதுவருஷகாலமாகத் தேசத்தொண்டு செய்துவருகிறோம். நாங்கள் அறியாததை நீங்கள் ஒன்றும் புதிதாகக் கண்டுபிடிக்க வில்லை. எங்கள் வார்த்தையைப் பின்பற்றி நடந்தால், உங்களுக்கும் நமது நாட்டிற்கும் க்ஷேமம் உண்டு என்பதைமாத்திரம் தெரிவிக்கிறேன். இச்சமயத்தில் உங்களுடன் பேசுவது தகாது. நீங்கள் அதிக கோபத்துடன் இருக்கிறீர்கள். ஆதலால் மற்றொருமுறை உங்களுடன் இதைப்பற்றிப் பேசுகிறேன்.

[செல்கிறார்]

புரே: கிழப் பிணங்கள்! பாபஜன்மங்கள்! புதிய உயிர் இல்லை; புதியவுணர்ச்சி இல்லை. இவர்களாலேயே நம் தேசம் கெட்டுவிடுகின்றது.

நாக: பெரியவர்களின் மனம் புண்படாதிருக்குமாறு நாம் வேலை செய்ய வேண்டும். அஃதொன்றையே நான்கூறக் கூடும்.

[ஈசானபுரத்துச் சேவகனொருவன் பிரவேசிக்கிறான்]

சேவகன்: [ஒருகடிதத்தைப் புரேசனிடம் கொடுத்து] அரசரின் ஆக்ஞை.

புரே: அதிரத அரசரா? எந்த மூலையில் எந்த நட்சத்திரம் மாறிவிட்டது! [அக்கடிதத்தை வாங்கிப்படித்து ஆச்சரியத்துடன்] நாகநாதா! இஃதென்ன நற்காலம்! இந்தக்கடிதத்தைப்பார்.

நாக: அதிரத அரசர் நம்மை அழைத்திருக்கிறார். [சேவகனைப்பார்த்து] நீசெல். கடிதத்தைச் சேர்ப்பித்து விட்டதாக அரசரிடத்துச் சொல்லிவிடு.

புரே: இக்கடிதத்திற்கு நீ என்னபதில் கூறப்போகின்றாய்?

நாக: கடிதத்திற்கு இணங்கவேண்டிய தவசியமே.

புரே: அங்ஙனம் இணங்க என்மனம் ஒருப்படவில்லை. வாலீசர் இங்கு இல்லை. யுத்தம் முடிந்த பிறகு சாத்தியப்பட்டால் ஈசானபுரத்திற்கும் சென்று இரகசியமாக அந்நாட்டின் நிலையை அறிந்துகொண்டு வருவதாகக் கூறினர். இந்தச் சமயத்தில் நாம் பாண புரத்தைவிட்டு அகல்வது சரியான தென்று நினைக்கிறாயா? மேலும் நம் நாட்டை கலிவுபடுத்திக் கொண்டிருக்கும் அரசரிடத்தில் நாம் எங்ஙனம் செல்வது?

நாக: நாம் சென்று அவர் தவறைத் திருத்தவேண்டும். அதுவே ஆண் தன்மைக்கு அழகு. துஷ்டன் என்று தூர விலகிவிட்டால் அத்துஷ்டன் திருந்துவதெங்ஙனம்? நாமன்றோ அவனைத்திருத்த வேண்டும்.

புரே: ஆனால் அதிரத அரசருடைய அழைப்புப் பத்திரத்திற்கிணங்கி ஈசானபுரம் செல்லவேண்டு மென்கிறாய்.

நாக: ஆம். வேறு பேச்சு வேண்டுவதில்லை. இதைப்பற்றி எவ்வித தருக்கமும் வேண்டுவதில்லை.

புரே: எப்போது வரச்சொல்லி யிருக்கிறார்?

நாக: தைமாதம் இருபதாந்தேதி வெள்ளிக்கிழமை காலை எட்டு நாழிகைக்கு மேல் பத்துநாழிகைக்குள் தம்மை வந்து காணுமாறு எழுதியிருக்கிறார்.

புரே: எந்த இடத்தில்?

நாக: திருவோலக்க மண்டபத்தில்.

புரே: [தனக்குள்] இதில் ஏதோ விசேஷமிருக்க வேண்டும்.

[யோசித்தவண்ணம் செல்கிறான். நாகநாதனும் பின் தொடர்கிறான்]

## இந்தியாவில் சாமான்களின் விலை யேற்றம்.

ஸ்ரீமான் பியோஹார் எம். ஏ., மாடர்ன் ரெவ்யூ பத்திரிகைக்கு மேற்சொன்னவிஷயத்தைப் பற்றிப் பின்வருமாறு எழுதுகிறார்:—

இந்தியாவிலும் உலக முழுமையிலும் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் எல்லாச்சாமான்களின் விலை அதிகமாக ஏறியிருப்பதேயாகும். இவ்விஷயத்தைப் பற்றி ஆளுவோரும் ஆளப்படுவோரும் கவனித்து வருகின்றனர். இந்தியாவில் சாமான்களின் விலையேற்றம் திடீரென்று ஏறிப்போய் விடவில்லை. இந்தியா சென்ற நூற்றாண்டில் அந்நியர்களுடன் வியாபாரம் செய்ய ஏற்பட்டதிலிருந்து சாமான்களின் விலை தினே தினே சிறிது சிறிதாய் ஏறிக்கொண்டே வந்தது. யுத்தத்தின் காரணமாக விலை வாசிகள் அதிகமாக ஏறி விட்டன. இந்தியா பெரும்பாலும் விவசாய நாடாகையால் சாமான்களின் விலையேற்றத்தால் இந்தியாவுக்கு நன்மை ஏற்பட்டிருக்கிறது. சாமான்களின் விலை அதிகமாக ஏறினதற்குக்காரணம் என்ன? அதனால் நன்மையா? தீமையா? அதைக் குறைக்கும் வழி, பிற்கால நிலை என்னும் இவ்விஷயங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்ய வேண்டும். இந்தியாவில் மாத்திரம் சாமான்களின் விலை அதிகமாக ஏறிவிடவில்லை. உலக முழுமையிலுமே சாமான்களின் விலை அபரிமிதமாய் ஏறியிருக்கிறது. இந்தியாவில் சாமான்களின் விலை அபரிமிதமாய் ஏறிவிட்டதற்குச் சிறப்பாக சில காரணங்கள் உள. அவைகளைப் பற்றிப் பின்னர் ஆராய்வோம்.

### விலையேற்றக் காரணம்.

அதிகமான உற்பத்தி கிடையாமையால் உலகில் சாமான்களின் விலை அதிகமாக ஏறி விட்டது. சண்டையின் காரணமாய் தொழில்களெல்லாம் சரியாய் நடைபெறுமற் போகவே உலகத்துக்கு வேண்டிய சாமான்கள் கிடைக்காமல் போய் விட்டன. சாமான்களின் விலை சண்டைக்கு முன்னிருந்ததைப் போல் வருவதற்கு இன்னுஞ் சில வருடங்கள்செல்லும். இங்கிலாந்தில் உற்பத்தி தொழிலாளர் வேலை நிறுத்தங்களினுலும், பணமாற்றலில் ஏற்பட்ட நெருக்கடியினுலும் தொழில் க்ஷீணித்து விட்டது. சண்டையின் போது பிரான்சிலிருந்த தொழிற்சாலைகள் அழிக்கப் பட்டுப் போனமையால் முன்னிருந்த மாதிரியாக உற்பத்தி செய்யக்கூடவில்லை. ஜெர்மனியில் சொல்லொணுப் பொருளாதாரக் கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இந்தியாவிலும் அதிக சாமான்களை உற்பத்தி செய்யக் கூடவில்லை.

தொழிலாளர்களுக்கு அதிக கூலி கொடுக்க வேண்டி யிருக்கிறமையாலும் போக்குவரவுக் கட்டணம் உயர்ந்து போனமையாலும் பொருள்களின் விலை அதிகமாய் ஏறிப் போய்விட்டதல்லாமல் உற்பத்தியும் குறைந்துபோய் விட்டது.

உற்பத்தி அதிகமில்லாமல் போய்விட, சாமான்களின் விலை அதிகமாக ஏறிவிட்டது.

நோட்டுகள் அதிகமாக உபயோகப் படுத்தப்பட்டமையாலும் சாமான்களின் விலை அதிகமாகி விட்டது. சண்டையின் போது போர்புரிந்த நாடுகள். அதிக நோட்டுகளை உபயோகித்து வந்தன. ஐரோப்பாவிலுள்ள 12 தேசங்கள், ஜப்பான், ஐக்கிய மாகாணங்கள் ஆகிய இந்நாடுகளில் உள்ள நோட்டுகளின் மதிப்பு 5,91,40,00,000 பவுன் ஆகும். 1914-ம் ஆண்டில் மேற் கூறிய நாடுகளில் 1,20,18,00,000 பவுன் மதிப்புள்ள நோட்டுகளே யிருந்தன. மேற்கூறிய நாடுகளின் அரசாங்க பொக்கிஷங்களிலிருந்த பிரத்தியேகப்படுத்தி வைக்கப்பட்டிருந்த தங்கம் நூற்றுக்கு நூறு வீதம் அதிகரித்தன. பணமாற்றலில் ஏற்பட்ட நெருக்கடியாலும் சாமான்களின் விலை அதிகமாகி விட்டது.

மொத்த வியாபாரிகள் அதிக லாபம் வைத்துக்கொண்டமையாலும் சாமான்களின் விலை அதிகமாகி விட்டது.

தரகர்கள் அதிக லாபம் சம்பாதிக்க முயன்றதாலும், தரகர்களின் தொகை அதிகமாகப் பெருத்துவிட்டபடியாலும் சாமான்களின் விலை அதிகமாகி விட்டது. பத்து வருடங்களுக்கு முன் உற்பத்தி செய்வோனுக்கும் வாங்குவோனுக்கும் இடையில் எட்டு தரகர்கள் இருந்தார்கள். தற்போது 14 தரகர்கள் இருக்கிறார்கள். சாமான்களை ஒரு மனிதனே அல்லது ஒரு கம்பெனியே விற்றலாலும் சாமான்களின் விலை அதிகமாகி விடுகிறது.

பொன் நாணயத்தின் மதிப்பு குறைந்து விட்டதும் ஒரு காரணமாகும்.

### சிறப்பான காரணங்கள்.

இந்தியாவுக்குச் சிறப்பான காரணங்களைக் கூறுவோம்.

இந்தியா அரசாங்கத்தார் வருமானக் கொள்கை (Fiscal policy) பாலும் சாமான்களின் விலையேறி விட்டது. இந்தியாவின் கைத்தொழில் நாசமுற்றதற்குக் காரணம் வரி இல்லாத வியாபாரமேயாகும். இதனுலும் சாமான்களின் விலை அதிகமாய் ஏறி விட்டது.

இந்தியா அரசாங்கத்தார் உணவுப் பொருள்களை மெசபடோமியா முதலான அந்நிய நாடுகளுக்கு அனுப்பி விடுவதாலும் சாமான்களின் விலை அதிகமாக ஏறி விட்டது. மெசபடோமியாவைப் பாதுகாக்கும் அதிகாரம் நமக்குக் கொடுக்கப்பட்டுள்ளமையால் பொருளாதாரக் கஷ்டமும் அதிகமாகியிருக்கிறது. தானிய வகைகள் பஞ்ச காலங்களின் போதும் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. 1920-ம் ஆண்டில் இந்தியா அரசாங்கத்தார் 4 லட்சம் டன் நிறையுள்ள கோதுமையை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதிசெய்திருக்கின்றனர். தேசத்தின் க்ஷேமத்தைக் கருதி அரசாங்கத்தார் தானிய வகைகளை வெளி நாடுகளுக்கு அனுப்புவதை நிறுத்தி விட வேண்டும்.

உள்ளூர் வியாபாரத்திற்குப் போதுமான ரெயில் வண்டிகள் கிடைக்காமையாலும் உணவுப் பொருள்களின் விலை அதிகமாக ஏறிவிட்டது.

கல்கத்தாவில் ஒரு மணங்கு சர்க்கரை ரூபா 25-க்கு விற்கப்பட்டது. அலகாபாத்தில் ஒரு மணங்கு 38 ரூபாய்க்கு விற்கப்பட்டது. உள்ளூர் வியாபாரத்திற்குப்போக்குவரவுக்கட்டணம் அதிகமாயிருக்கிறது. பொருளாதாரக் கமிஷன் முன்னிலையில் சாட்சியங் கூறுகையில் ஓர் இந்தியர் உள்ளூர் வியாபாரத்திற்குப் போக்கு வரவுக் கட்டணம் அதிகமாயிருக்கிற தென்றும் சென்னைக்கும் கல்கத்தாவுக்கும் எவ்வளவு கட்டணம் வாங்கப்படுகிறதோ அவ்வளவு கட்டணம் தான் கல்கத்தாவுக்கும் ஜப்பானுக்கும் வாங்கப்படுகிறதென் றும்கூறினர்.

இறக்குமதி குறைவாயிருப்பதும் சாமான்களின் விலையேற்றத்திற்கொரு காரணமாகும். நாம் வெளி நாடுகளிலிருந்து வரும் சாமான்களை அதிகமாக உபயோகிக்கிறோம். அவைகள் குறைந்து விட்டால் விலை அதிகமாக ஏறி விடுகிறது. 1913-1914-ம் ஆண்டின் இறக்குமதியை விட 1919-20-ம் ஆண்டில்இறக்குமதி அதிகமாகக் குறைந்து விட்டது. இறக்குமதி வரி நூற்றுக்கு 7½லிருந்து 11-க்கு ஏறி விட்டபடியால் இன்னும் இறக்குமதிச் சாமான்கள் குறையும். அதனுல் சாமான்களின் விலையும் அதிகமாகும். பணமாற்று இந்தியாவுக்குப் பாதகமாயிருப்பதாலும் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் சாமான்களின் விலை அதிகமாகும்.

### நன்மை தீமை.

சாமான்களின் விலை அதிகமாய்ப் போய்விட்டதனுல் ஏற்பட்ட நன்மை தீமைகளைப் பற்றி ஆராய்வோம்:—

சாமான்களின் விலை அதிகமாய் ஏறிவிட்டபடியால் நிரந்தரமான வருமானமுள்ளவர்களுக்கு அதிகக் கஷ்டம் ஏற்பட்டுள்ளது. இவர்கள் கஷ்ட ஜீவிகளானபடியால் இவர்களின் குறைகள் முன்னுக்கு வந்துள்ளன. பஞ்சத்திற்குத் தகுந்தாப்போல் இவர்களின் வரும்படி உயரவில்லை. சிவிலியன் உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பளம் அதிகமாக உயர்த்தப்பட்டது. நியாய இலாகா உத்தியோகஸ்தர்களுக்கும் தக்கபடி சம்பளம் உயர்த்தப்பட்டது. கீழ்த்தர உத்தியோகஸ்தர்களுக்குத்தக்க விதமாய்ச்சம்பளம் உயர்த்தப்படவில்லை. கணிதர்களுக்கு நூற்றுக்கு முப்பது வீதமே சம்பளம் உயர்த்தப்பட்டது. ஆனல் உணவுப் பொருள்களின் விலை வாசிகள் நூற்றுக்கு முன்னூறு வீதம் அதிகமாகிவிட்டன. சில கணிதர்கள் வேலையினின்று நீக்கப்பட்டார்கள். வட்டி விகிதங்களும் அதிகமாகியிருக்கின்றன. அரசாங்கக் கடன் பத்திரங்களின் விலை குறைந்துபோய் விட்டது. தொழிலில் பிரசித்தியடையாத தொழிலாளர்களுக்கு அதிகக்கஷ்டம் ஏற்படவில்லை.

விலையேற்றத்திற்குத் தக்கபடி கூலி விகிதங்களும் அதிகப் படாமையாலே தான் தொழிலாளர் வேலை நிறுத்தங்களும், தொழில் சம்பந்தமான இதர சச்சரவுகளும் நிகழ்கின்றன.

இந்தியாவிலுள்ள ஜனத் தொகையில் முக்கால் வாசிப்பேர் விளை பொருள்களைப் பயிரிடுவதிலேயே தங்கள் காலத்தைச் செலவிடுகின்றனர்.

### விவசாயிகளின் நிலை.

இந்திய விவசாயிகள் நிலைமையைப்பற்றிச் சர் ஓ' மூர்கிரீக் என்பவர் பின்வருமாறு கூறுகிறார்.

செழுமையான காலங்களிலும் இந்திய விவசாயிகள் ஒரு வேளைக்குக் கூட சரியான உணவின்றி வருந்துகிறார்கள். பஞ்ச காலங்களில் பஞ்ச நிவர்த்தி செய்வோர் இல்லாவிட்டால் இவ்விவசாயிகள் அதிகக் கஷ்டப்பட வேண்டும். குடியானவன் உழுகிறன்; விதை விதைக்கிறன்; பின்னர் அறுவடைசெய்கிறன். அறுவடை செய்தவுடன் அதில் பெரும் பாகத்தை வரியாக அரசாங்கத்துக்காகவாவது அல்லது தன் மேல் எஜமானனுக்காகவாவது கொடுத்து விட நேரிடுகிறது. தலையாரி, வெட்டியான், வண்ணன், அம்பட்டன் முதலியவர்களுக்கும் மிகுதியைப் பங்கிட்டுக்கொடுத்து விட்டு இவன் வெறுங்கையனுய் நிற்கவேண்டியிருக்கிறது. மறுபடியும் விதைக்காக அவன் கிராம தானியக் கடைக்காரனிடம் கடன் வாங்குகிறன். அவன் இதைக் கொண்டு உழுது, நல்லகாலம்வரும், அப்போது தம்முடைய கஷ்டங்கள் யாவும் நீங்கி விடுமென்று எண்ணிக் கொண்டிருக்கிறன். நல்ல காலம் ஒரு வேளையும் வருவதில்லை.

அநேக ஆயிரம் தொழிலாளர்கள் வேறு வேறு தொழில் செய்ய வேண்டுமென்று கருதி விவசாயத் தொழிலைப் புறக்கணித்து விட்டுக் கூலி வேலைக்குச் செல்கிறார்கள்.

சாமான்களின் விலை அபரிமிதமாய் ஏறி விட்டபடியால் தொழிலாளர்களுக்கும் நிரந்தரமான வரும்படி யுள்ளவர்களுக்கும் அதிகக் கஷ்டம் ஏற்படுகிறது.

### விலையைக் குறைக்க ஏற்பாடுகள்.

சாமான்களின் விலை அபரிமிதமாய் ஏறியிருப்பதைத் தடுப்பதற்குரிய வழிகள் எவை என்பதைப்பற்றி ஆராய்வோம்.

இந்தியா விவசாய நாடாகையால் விவசாயத்தை அதிகமாக விருத்தியாக்க வேண்டும். பாசனக் கால்வாய்கள் மூலமாய் விவசாயத்தை விருத்தியாக்கலாம். சென்றபத்து வருடங்களில் பஞ்சாபில் 192,852,000 எக்கர் விஸ்தீரணமுள்ள நிலம் சாகுபடி செய்யப்பட்டது.

அவற்றில் 2,45,15,000 விஸ்தீரணமுள்ள நிலம் பாசனக் கால்வாய்களின் மூலமாய்த் தான் சாகுபடிசெய்யப்பட்டது. பாசனக் கால்வாய்க்குச் செய்யும் செலவைக் காட்டிலும் இருமடங்கு அதிகமான செலவைரெயில்வேக்களுக்காகஅரசாங்கத்தார் செய்கின்றனர். சீர்திருத்தச் சட்டசபைகளினல் பாசனக் கால்வாய்களுக்காக அதிகத் தொகை செலவழிக்கப் படுமென்று நம்பப்படுகிறது.

உணவுப் பொருள், மற்ற பதன்செய்யப் படாத சாமான்களின் மீதும் ஏற்றுமதி வரி அதிகமாக்கப் படவேண்டும்.

இதனுல் சாமான்களின் விலை அபரிமிதமாய் ஏறி விடாமல் நிதானமாய் இருக்கும். பஞ்ச காலங்களில் அதிகமான கஷ்டம் ஏற்படாது. பருத்தித் தொழிலை ஆதரிப்பதற்கு அதன் மீது போடப்பட்டிருக்கும் வரியை எடுத்து விட வேண்டும். இறக்குமதியாகும் சர்க்கரையின் மீது இதுவரை நூற்றுக்குப் பத்து வீதம் வரி போடப்பட்டிருந்தது. தற்போது நூற்றுக்குப் பதினைந்து வீதம் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. இதனுல் இத்தேசத்திய சர்க்கரைத் தொழில் விருத்தியாகும். சர்க்கரை விஷயமாக ஆலோசித்து அறிக்கையை வெளியிட நியமிக்கப்பட்டிருக்கும் கமிட்டியார் என்ன சொல்லப் போகின்றனர் என்பதைப் பார்ப்போம். இராணுவச் செலவு அதிகமாய் விட்டபடியால் வரவுக்கு மேல் செலவு 18½ கோடி ரூபா அதிகமா யிருக்கிறது.

பணமாற்றல் விஷயம் சீர்திருத்தப்பட வேண்டும். தங்கநாணயச் செலவாணி அதிகமாயிருக்கவேண்டும்.

கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்த வேண்டும். விவசாயிகளுக்கு அதிகவட்டி வாங்காமல் கடன் கொடுக்கக் கூடிய பாங்குகள் ஏற்படவேண்டும்; இதனுல் விவசாயிகளுக்கு மிக்க நன்மை ஏற்படும். சிறந்த விதைகளை அரசாங்கத்தார் விவசாயிகளுக்குக் கொடுக்கவேண்டும்.

கூட்டுறவுப் பண்டகசாலைகள் ஏற்படவேண்டும்.

### பிற்கால நிலை.

சாமான்களின் விலை இனிமேல் எப்படியிருக்குமென்று நிர்ணயிக்கக் கூடவில்லை. சண்டை நிறுத்தம் ஏற்பட்டவுடன் விலைவாசிகள் சிறிது குறைவடைந்தன. பின்னர் சண்டையின் போது இருந்ததைவிட அதிகமாக உயர்ந்து விட்டன. விலைவாசிகள் திடீரென்று குறைந்தால் கடைக்காரர்கள் பெருத்த நஷ்டத்திற்கு உள்ளாவதல்லாமல் வேலை இல்லாமையும் ஏற்படுமாகையால் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைவது தான் நலம். விலை வாசிகள் கொஞ்சம் கொஞ்சமாகத் தான் குறையும். பணமாற்றல் சரியான நிலைக்குவர இன்னும் மூன்று அல்லது நான்கு வருடங்கள் பிடிக்கும். கூலியைக்குறைப்பதற்குத் தொழிலாளர்கள் இஷ்டப் படமாட்டார்கள்.

கூலியைக் குறைப்பதற்கு ஏற்பாடு செய்ததன் மேல் இங்கிலாந்திலுள்ள தொழிலாளர்கள் சென்ற ஏப்ரல் மாதத்தில் வேலை நிறுத்தம் செய்வதாக பயமுறுத்தினர். மிஸ்டர் லாயிட் ஜார்ஜின் பெருமுயற்சியால் பொது வேலைநிறுத்தம ஏற்பட விருந்தது நின்று விட்டது. இக்காரணங்களினுல் விலைவாசிகள் கொஞ்சம் கொஞ்சமாகத் தான் குறையும்.

சென்ற ஜனவரிமாதத்தில் மிஸ்டர் லாயிட் ஜார்ஜ் பின்வருமாறு பேசினர்.

இங்கிலாந்தில் அதிக கம்பெனிகள் ஏற்பட்டுத் தொழிலாளர்கள் அதிகமாகத் தேவையிருந்தகாலம் போய்விட்டது. தற்போது வேலையின்மை ஏற்பட்டிருக்கிறது. இது சீக்கிரம் முடிவுறுமோ அல்லது நீடித்திருக்குமோ தெரியாது. ஆனல் அதிகக்கவலை ஏற்படும்.

1919-20-ம் ஆண்டில் இந்தியாவில் 559 இந்தியக்கம்பெனிகள் ஏற்பட்டன.

இந்தியாவில் தற்போது விலைவாசிகள் சிறிது சிறிதாகக் குறைந்துகொண்டே வருகின்றன. இன்னும் இரண்டு அல்லது மூன்று வருடத்திற்குள் விலைவாசிகள் சண்டைக்கு முன்னிருந்த நிலைக்கு ஏறக் குறைய வரலாம்.







## அறிவிப்பு.

எமது பத்திரிகை மாதிரி காபி பெற விரும்புவோர் இரண்டு அணு தபால் முத்திரை அனுப்பக் கோருகிறோம்.

மானேஜர், "நவசக்தி"

தேன் இந்தியா
திராவிட ஆயுர்வேத வைத்திய ஸம்மேளன
வஸ்து ப்ரதர்சன சாலையில்
1619-ல் முதல்தர யோக்யதா பத்திரம்
பெற்றதும் 30-வருஷங்களாக
எங்களுக்கு அனுபவ சித்திதந்து
வருவதுமான

# சித்தகல்ப - - மகரத்வஜம்.

**(Registered)**

சென்னை
ஆயுர்வேத ஔஷதசாலைத்
தலைவராகிய
ஆயுர்வேத ரத்னபண்டிட்,

## N. V. ஸ்ரீராமாச்சார்லு,

Ph. D. Sc.

இவர்களால் சந்திரோதயம், தங்கம், வெள்ளி, அப்ரகம், தாம்பிரம், முத்து, பவழம், அயக்காந்தசத்து முதலிய பல செந்தூர பஸ்பங்களைக் கொண்டும், மஹா சஞ்சீவி மூலிகைச் சத்துக்களைக்கொண்டும் சாஸ்திரோக்தமாய் தயாரிக்கப்பட்ட ஓர்ஔஷதம்.

இது ஒரு மஹானால் உபதேசிக்கப்பட்டு பிரத்யக்ஷானுபவமாய் பல ஆண்டுகளாக (ஆங்கில வைத்திய நிபுணர்களாலும் சுதேச வைத்திய சிரேஷ்டர்களாலும் நிராதெனக் கைவிடப்பட்ட) ஆயிரக்கணக்கான வியாதியஸ்தர்களுக்குக் கொடுத்து எல்லோரும் குணமடைந்திருக்கிறார்களென்பது உலகமறிந்த உண்மையே. இப்போது பலர் தூண்டுதலை முன்னிட்டு திராவிட ஆயுர்வேதத்தின் உண்மையை நிலைநாட்டுவதற்கென்றே வெளியில் வந்திருக்கிறோம். தற்போதுள்ள போலி வைத்தியர்களைப்போல் நினைக்காமல் ஒவ்வொருவரும் இம்மருந்தை உபயோகப்படுத்தி வியாதி நீங்கி சுகதேகியாயும் நீண்ட ஆயுளையும் பெறுவீர்களென்று நம்புகிறோம்.

**இதனால் தீரும் வியாதிகள்.**

எல்லாவித நாள்பட்ட வெள்ளைகள், கிரந்தி, கண்டமாலை, குழிப்புண், மேகப்புண், செம்மேகம், கருமேகம், வெண்மேகம் முதலிய படைகள், எல்லாவிதக் குஷ்டங்கள், பவுத்திரம், மூலம், கை கால் முடக்கு, சூதகச்சிக்கல், ஸ்திரீகளுக்கு உண்டாகும் வயிற்றுவலி, சூதகவாய்வு, அண்டவாதம், எல்லா வாய்வுகள், பாரிச வாய்வு, கைகால் பிடிப்பு, வீக்கம், கபால வாய்வு, சித்தப்பிரமை, சோகை, பாண்டு, மகோதரம், நீர் எரிச்சல், அதிமூத்திரம், நீரிழிவு, எல்லாவித காசங்கள், விஷ சுரங்கள், மண்டையிடி, எல்லா பேதிகள், மற்றும் இளமைப் பருவத்தில் சேகரித்துக் கொண்ட மேகரோகக் கூட்டங்களாகிய எல்லா வியாதிகளையும் சூரியனைக்கண்ட பனிபோல் போக்கி அதிக பசி தீபனத்தையும் இரத்த விருத்தியையும் கொடுத்து தாது புஷ்டியை உண்டுபண்ணி நல்ல தேஜஸைக்கொடுத்து அகால மரணத்தைத் தடுத்து ஆயுளை விருத்தி செய்யும் என்பது அனுபவமாய்க் கைகண்டது. இம்மருந்தை காலதேச பத்தியமின்றிப் பாலர் முதல் விருத்தாப்பியர் பரியந்தம் ஆண் பெண் யாவரும் உபயோகிக்கலாம். உபயோகப்படுத்தும் விதம், முதலிய முழு விவரங்களும் மருந்துடன் அடக்கம் செய்து அனுப்பப்படும்.

பூரண சவுக்கியத்தை உண்டு பண்ணக் கூடிய 60-மாத்திரைகள் அடங்கிய புட்டி 1-க்கு விலை ... ரூ. 10 0 0

30 மாத்திரைகள் கொண்ட புட்டி 1-க்கு ... ரூ. 5 8 0

வி. பி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

சென்னை ஆயுர்வேத
ஔஷத சாலை,
தபால் பெட்டி நெ. 151, 2-44
கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, மதராஸ்.

தந்தி விலாசம், "Kalpam" Madras

# மின்சார ரசம்.

சென்ற ஒரு வருஷத்திற்கு அதிகமாக சேலம் ஆர். கிருஷ்ண அண்ட் கோ., என்ற விலாசத்தார் இம்மருந்தை விற்று வந்தார்கள். 1921-ம்வருஷம் பிப்ரவரிமாதம் 7-ந்தேதிமுதல் இம்மருந்தை மேற்படி கம்பெனியில் விற்பது நிறுத்தப்பட்டிருக்கிறது. இனிமேல் "மின்சார ரசம் கம்பெனி" சேலம், என்ற விலாசத்தாரிடம் தான் மின்சார ரசம் விற்கப்படும். ஆகையால் இனி ஆர். கிருஷ்ண அண்ட் கம்பெனியார் ஏதாவது மருந்து விற்றால் அது டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு அவர்களின் மருந்து அல்ல.

குறிப்பு.—இந்த ஆர். கிருஷ்ண அண்ட் கம்பெனியார் "மின்சார ரசத்தை" விற்பனை செய்து வந்த காலத்தில் "மின்சாரம்" என்னும் தந்தி விலாசத்தை வகித்து வந்தார்கள். இப்பவும் மேற்படி கம்பெனியாருக்கும் இந்த மின்சார ரசத்தின் விற்பனைக்கும் யாதொரு சம்பந்த மில்லையாயினும் அவர்கள் இன்னும் அதே தந்தி விலாசத்தை வகித்து வருகிறார்கள். ஆகவே அவர்கள் வகித்து வரும் "மின் சாரம்" என்னும் தந்தி விலாசத்தைக் கண்டு அந்த கம்பெனியாருக்கும் "மின்சார ரசத்திற்கும்" ஏதோ சம்பந்தமுள்ளதாக எண்ணி ஏமாந்துவிடாதீர்கள். மின் சார ரசக் கம்பெனியின் தந்தி விலாசம் "ரசம் கோ" என்று ரிஜிஸ்டராகியிருக்கிறது.

முக்கிய கவனிப்பு:—இந்த தேவாமிர்தம் போன்ற "மின்சார ரசத்தின்" அபூர்வ சக்தியைக் கண்டு அநேகர் சில போலி ரசங்களைத் தயாரித்து ஏதோ "ரசம்" என்னும் பல பெயர்களிட்டு விற்கப் பிரயத்தனம் செய்து வருகிறார்களாகையால் அதை டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு அவர்களின் "மின்சார ரசம்" என்று ஏமாந்து விடாதிருக்குமாறு எச்சரிக்கிறோம். டாக்டர் நாயுடு அவர்களால் தயாரிக்கப்பட்டு வரும் அவுஷதத்தின் ஒவ்வொரு பாட்டிலின் பேரிலும் "மின்சார ரசம்" என்று ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட்மார்க் இருக்கிறது. இதைத் தயவு செய்து கவனியுங்கள்.

மின்சார ரசம் புட்டி விலை ரூபா 2.
தபால் சார்ஜ் அணா 5.

மானேஜர்,
**மின்சார ரசம் கம்பெனி,**
சேலம்.

சுதேசியமானது! உபயோகமானது!!

# அமிர்தாஞ்சனம்

## எல்லா நோய்களுக்கும் சித்தௌஷதம்

தலைநோய், முதுகுநோய், இடுப்புவலி, மார்ச்சளி, சைத்தியம், கீல்பிடிப்பு, இருமல், ஒத்தைத் தலைநோய், வீக்கம், சுளுக்கு முதலான நோய்களுக்கு திவ்யாமிருதம். டப்பி 1-க்கு 0—10—0. டஜன் 1-க்கு 6— 0—0.

| படை மருந்து | பற்பொடி | மோஹினி தைலம் |
|---|---|---|
| டப்பி 1-க்கு 0—6—0 | டப்பி 1-க்கு 0—2—0 | டப்பி 1-க்கு 0—12—0 |

அமிர்தாஞ்சனம் டிபோ; மதராஸ்; பொம்பாய்.

Telegrams "SADANANDAM" Established 1910.

# முக்கிய விளம்பரம்.

எங்களால் தயார்செய்யப்படுகிற சதானந்த "சர்வரோக நிவாரணி" யானது 100 கணக்கான வியாதிகளை குணப்படுத்துகிறது. இதற்குப் பத்தியமே இல்லை; இதை இன்ன நேரத்தில்தான் உட்கொள்ள வேண்டுமென்ற நியதியும் இல்லை. இது வெளிப்பிரயோகம் உட்பிரயோகம் இரண்டிற்கும் உபயோகப்படுகிறது. தவறிச்சாப்பிடுவதனால் எவ்விததீங்கும் செய்வதில்லை. பாலர் விருத்தர்யாவரும் சந்தேகமில்லாமல் சாப்பிடலாம். இம்மருந்தை கன்றுகாலிகளுக்குங்கூட உபயோகப்படுத்தலாம். இம்மருந்தானது சர்க்கியூட் ஆபீசர்களுக்கு மிகவும் சௌகரியமாயிருப்பதுடன் இயந்திரம் ஆயுதம் முதலியவைகளால் நேரிடும் அபாயகரமான காயங்களையும் வெகு விரைவில் குணப்படுத்தும். இம்மருந்தைப் பல இங்கிலீஷ் வைத்தியர்களும், ஐரோப்பியர்களும், இந்து கனவான்களும் விசேஷமாகப் புகழ்ந்து கூறியிருக்கிறார்கள். மருந்துக்கு ஆர்டர் செய்கிறவர்களுக்கு முழுவிவரமடங்கிய கியாட்லாக் புத்தகமொன்று இனாமாக அனுப்பிக் கொடுக்கப்படும்.

வி. லக்ஷ்மிநரசு அண்டு பிரதர்,
சதானந்த வைத்தியசாலை,
கோயமுத்தூர்.

மருந்தின் விலை ரூ. **2-0-0.**
வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.
A TRIAL IS SOLICITED.

# மணித் தைலம்

பரிமள மிகுந்த வாசனைத் தைலம், சாஸ்திர முறைப்படி காய்ச்சின தைலமாகையால் உபயோகிக்கிறவர்களுக்கெல்லாம் அற்புதமான குணத்தைக் கொடுக்கிறது. சொற்பகாலமாய் வெளிவந்துலாவும் தைலத்தைப் போல் கருதிவிடக்கூடாது. நமது மணித் தைலம் 35-வருஷமாய் விற்பனையாகி வருகிறது. தலைமயிரை உதிராமல் தடுப்பதன்றி மிருதுவாயும் கருப்பாயும் வளரச்செய்யும், மூளையைக் குளிரச் செய்கிறது. ஒரு புட்டியின் விலை ரூபா 1.

வைத்திய சாஸ்திரி,
மணிசங்கர் கோவிந்தஜீ,
ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம்,
26, பிராட்வே, மதராஸ்.
27, டாம் தெரு, கொழும்பு.

# GRAND SALE.

விலை ரூபா ஒன்றே.

## சினிமோட்டோ கிராப்.

CINEMATOGRAPH.

இந்த சினிமோட்டோ கிராப்பில் பயாஸ் கோப்பில் காண்பதைப் போல் பல வித மோட்டார் வண்டிகள் ஓடுவதுபோலவும் மனிதர்கள் நடப்பது போலவும் காணலாம். ஆனால் தற்சமயம் இதர கம்பெனியார்கள் இதே சினி மோர்ட்டோ கிராப்பை விலை ரூபா 2 வீதம் விற்பனை செய்கிறார்கள்

16-பலவித படத்துடன் கூடியபெட்டி 1-க்கு ரூபா 1.

ராஸ் வாட்ச் & Co,
நெ. 3. இருளப்பன் தெரு, மதராஸ்

# நூதன ரோம சங்காரி.

ல்யூனர் டெபிலேடரி சோப்பு, ஆயில் பவுடர், எது வேண்டும்? சரீரத்தில் எந்த பாகத்திலும் மேல் கண்ட எதையாகிலும் உபயோகிக்க ரோமங்களை நீக்கும். தோலின் வர்ணத்தை மாற்றாமலும் எரிச்சல் இல்லாமலும் எடுக்கக்கூடியது.

உத்தரவாத முடையது. ஏஜெண்டுகள் தேவை. மூன்று வில்லைகள் அல்லது புட்டிகள் அடங்கிய பெட்டி 1-க்கு வி. பி. செலவு உள்பட ரூபா 1-8-0.

என். ல்யூனர் அண்டு கோ,
போஸ்டு பாக்ஸ் நெ. 543,
பார்க் டவுன், மதராஸ்.

## "பஞ்சாயத்து" பத்திரிகை.

மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

பிரதி கிராமத்தாரிடத்திலும், தேசாபிமானிகளிடத்திலும் இருக்கவேண்டிய பத்திரிகை இதுதான். மகாத்மா காந்தியடிகளின் விருப்பப்படியும், எல்லாருடைய விருப்பப்படியும் நியாயம் வழங்கப்படவேண்டுமானால் பஞ்சாயத்து சபையே வேண்டும். பஞ்சாயத்துக்கள் ஏற்பட்டு நன்கு நடைபெற இப்பத்திரிகை இன்றியமையாதது. இப்பத்திரிகை சென்னை மாகாண ரயத்துவாரி நிலசுவாந்தார்களின் சங்கத்தின் நோக்கத்தையே தழுவி வெளிவருகிறது. இதில் கிராம சம்பந்தமான கிராமப் பஞ்சாயத்துகள், இதா ரயத் வாரி நில விஷயங்கள், பஞ்சாயத்து சபைகள், ஐக்கியசபைகள், ஸ்தலஸ்தாபனவிஷயங்கள், கல்வி, சுகாதாரம், தொழில், விவசாயம், மற்றும்பல விஷயங்கள் வெளிவருகின்றன. பஞ்சாயத்துசபைகளை ஏற்படுத்திக் கொள்ள இப் பத்திரிகையை ஓர் துணைக்கருவியாகக் கொள்ளலாம்.

வருஷ சந்தா ரூபா 3-4. தான்.

மானேஜர். பஞ்சாயத்து,
தென்னூர், திரிசிராப்பள்ளி

Printed and Published by T. V. Kalyanasundara Mudaliar, at the, Sadhu Press, 44-Bazaar Road, Royapettah, Madras.

